பொன்விழா வெளியீடு

பொதுப்பதிப்பாசிரியர்

டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி

---

# பிரத்யபிஜ்ஞா ஹ்ருதயம்

(தமிழ் மொழிபெயர்ப்பு)

# பிரத்யபிஜ்ஞா ஹ்ருதயம்

மூலம்

க்ஷேமராஜர்

தமிழாக்கமும் விளக்கமும்


பெ. திருஞானசம்பந்தன்






டாக்டர் S. இராதாகிருஷ்ணன்
மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக் கழகம்

1978

# அணிந்துரை

சென்னைப் பல்கலைக் கழகத்தின் மெய்யுணர்வு ஆராய்ச்சித் துறை 1927 செப்டம்பர் மாதத்தில் நிறுவப் பெற்றது. 1964 ஆகஸ்ட் மாதத்தில் இத்துறையைப் பல்கலைக் கழக மானியக்குழு மேல்நிலையக் கல்வி மையமாக்கியது. 1976 முதல் இதன் பெயர் டாக்டர் S. இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு மேல் நிலையக் கல்வி நிறுவனம் என்பதாயிற்று.

தொடங்கப் பெற்ற நாள் முதல் இத்துறையின் குறிக்கோள் (1) இந்தியத் தரிசனங்களையும் (2) ஏனைய தரிசனங்களையும் ஆராய்வதேயாகும். சென்ற ஆண்டில் இக்குறிக்கோளை உளங் கொண்டு சிறப்புச் சொற்பொழிவுகள் ஏற்பாடு செய்யப்பெற்றன.

இந்திய மெய்யுணர்வுத் துறை பல்வகைத்தாயிருப்பதைப் போலவே சைவமும் பலவகைத்து. இவ்வகைகளில் பெரும் பாலானவை வழக்கற்றுப் போயின. இன்று நமக்கு எஞ்சியுள்ளவை பின் வருவன.

(1) தமிழகத்தில் பெருவழக்காகவும் கடல் கடந்த கீழை நாடுகளில் சில இடங்களிலும் காணப் பெறுவதான சைவ சித்தாந்தம்.

(2) கன்னடம் தெலுங்கு தமிழ் வழங்கும் மாநிலங்களில் பயிலப் பெறும் வீரசைவம்.

(3) ஸ்ரீகண்ட (நீலகண்ட) சிவாசாரியார் அருளிச்செய்த பிரம்ம சூத்திரங்களின் பேருரையை அடிப்படை யாகக்கொண்ட சிவாத்வைதம்.

இவற்றுள் காஷ்மீர சைவத்தைத் தமிழ் மக்கள் தெரிந்து கொள்வதற்காகக் காஷ்மீர சைவத்தினை விளக்கும் மூல நூல் ஒன்றின் மொழி பெயர்ப்பை வெளியிட வேண்டும் என்று எங்கள் நிறுவனம் முடிவு செய்தது. காஷ்மீர சைவத்தின் மூல நூலாகிய க்ஷேமராஜரின் **பிரத்யபிஜ்ஞா ஹ்ருதயம்** என்ற நூலினை மொழி பெயர்த்துத் தருமாறு எங்கள் நிறுவனம் விடுத்த வேண்டுகோளினைப் பேராசிரியர் பெ. திருஞானசம்பந்தன் அவர்கள் அன்புடன் ஏற்றனர். பேராசிரியர் பெ. திருஞானசம்பந்தன் அவர்கள் ஆங்கிலம், வட மொழி, தமிழ் ஆகிய மும்மொழிகளில் புலமை பெற்றுள்ளதுடன்

சைவத்தில் ஆழ்ந்த பற்றும் உடையவர்கள். க்ஷேமராஜரின் **பிரத்யபிஜ்ஞா ஹ்ருதயம்** என்ற நூலினை மொழி பெயர்த்து, இந் நூலாக வெளி வருவதற்கு உதவிய அவர்களுக்கு எங்கள் நிறுவனம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

1977 செப்டம்பர் மாதத்தில் இத்துறை ஐம்பது ஆண்டுகள் நிரம்பப்பெற்றது. இப் பொன்விழாவை யொட்டி எங்கள் நிறு வனத்தில் சென்ற ஆண்டு முதல் நிகழ்ந்த சொற்பொழிவுகளைப் பொன்விழா வெளியீடுகளாக அமைத்துள்ளோம். பொன்விழா வெளியீட்டில் ஒன்ருக இந்நூல் வருவது பெருமகிழ்ச்சிக்குரியது.

சிறப்புச் சொற்பொழிவுகளை அமைக்கவும் வெளியிடவும் பொருள் உதவி செய்து வருவதோடு அவ்வப்போது ஆக்கமும் ஊக்கமும் தந்து வருகிற தமிழக அரசுக்கும், பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் மால்கம் S. ஆதிசேஷையா அவர்களுக்கும், பல்கலைக்கழக ஆட்சிக்குழு/பதிவாளர்/அலுவலக உறுப்பினர்களுக் கும் நன்றி தெரிவித்துக் கொள்கிருேம். இத்துறையை உயர்த்திப் பத்து ஆண்டுகள் வரை பொருள் உதவி தந்ததோடு அமையாது பின்னரும் இந்நிறுவனத்தின் முன்னேற்றத்தில் பரிவு காட்டி வரும் பல்கலைக்கழக மானியக் குழுவுக்கும் நன்றி தெரிவித்துக்கொள் கிருேம்.

மெய்யுணர்வுத் துறை தொடங்கப் பெற்றபோது அதனை விரி வாகவும் உயர்வாகவும் அமைத்த பேராசிரியர் காலஞ் சென்ற S. S. சூரியநாராயண சாஸ்திரி அவர்களுக்கும், முப்பத்தைந்து ஆண்டுகளாக முழு மூச்சாக உழைத்து அதனைச் சிறப்புறச் செய்த இந்நிறுவனத்தின் முன்னுள் இயக்குநர் டாக்டர் T. M. P. மகா தேவன் அவர்களுக்கும் நிறுவனம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த இரத்தினம் அச்சகத் தாருக்கு எங்கள் நன்றி.

வ. ஆ. தேவசேனபதி,
*பொதுப் பதிப்பாசிரியர்.*

# முன்னுரை

சைவ சமயம் மிகத்தொன்மை வாய்ந்தது; கடல் கடந்தும் பரவியுள்ளது என்பதை அனைவரும் அறிவர். ஹரப்பா நாகரிக காலம் முதற்கொண்டே சைவவழிபாடு இருந்துவந்திருக்கிறது என்பது அறிஞர் சிலரின் கருத்து இந்திய நாட்டிலே குமரி முதல் காஷ்மீரம் வரை பரவியுள்ள இச் சமயத்தில் மூன்று முக்கியமான பிரிவுகள் குறிப்பிடத்தக்கவை. அவை தென்பகுதியில் பெருமளவில் வழங்கும் சைவ சித்தாந்தம், வீரசைவம் ஆகியவற்றுடன் காஷ்மீரத்தில் வழங்கும் 'த்ரிகம்' எனப்படும் காஷ்மீர சைவமும் ஆகும். சைவ சித்தாந்தக் கருத்துக்கள் 7-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த ஞானசம்பந்தர், அப்பர் ஆகியோரின் பாடல்களிலும் அதற்கு முற்பட்ட காலத்திய சிவாகமங்களிலும், திருமூலர், காரைக்காலம் மையார் போன்றாரின் பாடல்களிலும் காணப்படுவன. காஷ்மீர சைவம் அதைத் தோற்றுவித்த வசுகுப்தர் காலமாகிய 9-ஆம் நூற்றுண்டில் தோன்றியது. ஆதிசங்கரரின் அத்வைதக்கொள்கை பரவியதன் காரணமாக த்வைதக் கொள்கைகளைத் தாங்கிநின்ற சில சிவாகமங்களும் அத்வைத் நோக்கில் விளக்கம் தரப்பெற்றன என்ற கருத்தை டாக்டர் காந்தி சந்திர பாண்டே என்பவர் அபிநவகுப்தரைப் பற்றிய தமது நூலில் குறிப்பிட்டிருக்கிறார். பிரத்யபிஜ்ஞாஹ்ருத யத்தின் ஆசிரியரான க்ஷேமராஜர் ஸ்வச்சந்தாகமத்திற்குத் தான் எழுதியுள்ள 'உத்யோதம்' என்ற உரையின் இறுதியில் பின்வருமாறு எழுதியுள்ளதும் கருதத்தக்கது—"முன்னோர் மரபை மேற்கொண்ட மக்கள் அறியாமையால் சைவத்தை 'பேததரிசன'மாகக் கருதி வந்தனர். அவ்வறியாமையைப் போக்கவல்லது அத்வைதாமிருதம் பொங்கும் ஸ்வச்சந்தாகம வியாக்யானமாகிற உத்யோதம்." 'பரமார்த்தசாரம்' என்ற நூலில் அபிநவகுப்தரால் (10-ஆம் நூ.) இச் சாஸ்திரம் 'சிவாத்வய சாசனம் (சாஸ்திரம்)' என்று கூறப்பட்டுள்ளது.

'த்ரிகம்' என்று இச் சாஸ்திரம் கூறப்படுவதற்கு ஆசிரியர்கள் பல்வேறு வகையில் பொருள் கொண்டுள்ளனர். சிவன், சக்தி, நரன் அல்லது சிவன், சக்தி, அணு, அல்லது பதி, பாசம், பசு, அல்லது பரா, அபரா, பராபரா என்ற சக்திகள், அல்லது அபேதம், பேதா பேதம், பேதம் என்ற நிலைகள், அல்லது சித்தம், நாமகம், மாலினீ என்ற சாத்திரங்கள் ஆகியவற்றைப் பற்றிக் கூறப்படுவதாக இது கொள்ளப்படுகிறது.

இந்த த்ரிக சாஸ்திரத்தை மூன்று வகையாகப் பிரிப்பதுண்டு. அவை (1) ஆகம சாஸ்திரம், (2) ஸ்பந்த சாஸ்திரம் (3) பிரத்ய பிஜ்ஞா சாஸ்திரம் என்பன.

ஸ்ரீகண்டசிவனிடமிருந்து தோன்றி வழி வழியே வந்தமையால் 'ஆகம சாஸ்திரங்கள்' என்று அவை வழங்கப்படுகின்றன. இவற்றுள் முக்கியமானவை மாலினீ விஜயம், ஸ்வச்சந்தம், விஜ்ஞான பைரவம், மிருகேந்திரம், மதங்கம், ஸ்வாயம்புவம், ருத்ரயாமளம் ஆகியவை. அத்வைத சைவத்திற்குச் சிறந்த பிரமாண நூலாகக் கருதப்படும் 'மாலினீ விஜயம்' த்வைதக் கருத்துக்களைக் கொண்டிருந்தபோதிலும் பின்னர் அத்தைவ முறையில் விளக்கப்பெற்றன என்று ஜகதீச சந்திர சார்ட்டர்ஜீ 'காஷ்மீர சைவம்'பற்றிய நூலில் குறிப்பிட்டுள்ளார். இப்பிரிவில் முக்கியமான நூல் 'சிவ சூத்திரங்கள்' எனப் படுவது. இது சிவனாலேயே ஆக்கப்பட்டதென்றும், ஒரு மலைப் பாறையில் பொறிக்கப்பட்டிருந்ததென்றும், வசுகுப்தரின் கனவில் சிவபெருமான் தோன்றி உலகம் உய்ய அத்வைத சைவம் விளங்க அச்சிவ சூத்திரங்களை மக்களுக்கு உணர்த்துமாறு அவர் பணிக்கப் பட்டார் என்றும், அங்ஙனமே இது காஷ்மீராத்வைத சைவத்திற்கு முதனூலாக வழங்கி வருகிறதென்றும் க்ஷேமராஜரால் சிவசூத்ர விமர்சினீ என்ற நூலில் குறிக்கப்பட்டுள்ளது. இச்சிவ சூத்திரங்களுக்கு ஒரு விருத்தியும், பாஸ்கரருடைய (11-ஆம் நூ.) வார்த்திகமும், க்ஷேமராஜரின் (11-ஆம் நூ.) விமர்சினியும் உள்ளன.

'ஸ்பந்த சாஸ்திரம்' என்பது சிவசூத்திரங்களில் கூறப்பட்டுள்ள கருத்துக்களை மேலும் விளக்கமாகக் கூறுவது. சிவசூத்திரங்களைப் போலவே பெரும்பாலும் தத்துவரீதியில் ஆராயாமல் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் இவை சொல்லிச் செல்கின்றன. இப் பிரிவில் முக்கியமான நூல் 'ஸ்பந்தகாரிகை' என்பதாகும். இது வசுகுப்தரால் இயற்றப்பட்டதென க்ஷேமராஜர் கூறுவர். இதற்கு கல்லடர் (9-ஆம் நூ.) விருத்தி எழுதியுள்ளார். ராமகண்டரால் இயற்றப்பட்ட 'ஸ்பந்த விவிருதி', உத்பல வைஷ்ணவரால் இயற்றப் பட்ட 'பிரதீபிகை', க்ஷேமராஜரால் இயற்றப்பட்ட 'ஸ்பந்த சந்தோஹம்', 'ஸ்பந்த நிர்ணயம்' ஆகிய இவை 'ஸ்பந்தகாரிகையை' ஒட்டி எழுதப்பட்டவை.

'பிரத்யபிஜ்ஞா சாஸ்திரம்' என்பதுதான் உண்மையிலேயே தத்துவ ரீதியில் த்ரிகக் கொள்கைகளை விசாரிக்கும் சாஸ்திரம். தர்க்க நெறியைப் பின்பற்றி 'சுவபக்ஷம்', 'பரபக்ஷம்' என்ற வகையில் த்ரிக சாஸ்திரத்தை முதலில் ஆராய்ந்தவர் வசுகுப்தரின் மாணாக்கரான சோமானந்தர் (9-ஆம் நூ.) ஆவார். இத்துறையில் தோன்றிய முதல்நூல் அவர் இயற்றிய 'சிவத்ருஷ்டி' என்பதாகும். இவருடைய மாணாக்கரான உத்பலர் 'ஈசுவர பிரத்யபிஜ்ஞா சூத்திரங்கள்' என்ற நூலை எழுதினார். இந்நூல் நாட்டின் பிற பகுதி

களிலும் புகழ்பெற்றிருந்த காரணத்தினுல்தான் போலும், மாதவா சாரியரால் இயற்றப்பட்ட சர்வ தர்சன சங்கிரகத்தில் காஷ்மீரசைவம் 'பிரத்யபிஜ்ஞா தர்சனம்' என்ற தலைப்பில் விளக்கப்பட்டுள்ளது. உத்பலரின் இந்நூலுக்கு அவரே 'விவிருதி' என்ற உரையை எழுதி யிருக்கிருர். மேலும் இதே நூலுக்கு அபிநவகுப்தரால் பிரத்யபிஜ்ஞா என்ற சிற்றுரையும், பிரத்யபிஜ்ஞா விவ்ருதிவிமர்சினீ என்ற பேருரையும் உள்ளன. அபிநவகுப்தரின் 'தந்த்ராலோகம்' என்ற நூல் காச்மீர சைவத்தின் எல்லா அம்சங்களையும் கொண்ட விரிவான நூல். அபிநவகுப்தரின் சீடரான யோகராஜரால் எழுதப்பட்ட அபிநவகுப்தரின் பரமார்த்தசாரத்தின் உரையும், மற்ருெரு சீடரான க்ஷேமராஜரால் எழுதப்பட்ட 'பிரத்யபிஜ்ஞா ஹ்ருதயமும்' இப் பிரிவைச் சார்ந்த குறிப்பிடத்தக்க நூல்கள்.

க்ஷேமராஜரால் எழுதப்பட்ட 'பிரத்யபிஜ்ஞா ஹ்ருதயம்' என்ற இந்நூல், வேதாந்த நூல்களுக்கிடையே சதானந்தரின் வேதாந்த சாரம் போல, 'பிரகரண கிரந்தம்' என்ற வகையில் எழுதப் பட்ட எளிய நூல். பரதரின் நாட்டிய சாஸ்திரத்திற்கும் ஆனந்த வர்த்தனரின் த்வன்யாலோகத்திற்கும் தலைசிறந்த உரை நூல்களை இயற்றிய அபிநவகுப்தரின் மாணுக்கர் 11-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த க்ஷேமராஜர் ஆவார். இவர் இயற்றிய நூல்களாவன பிரத்யபிஜ்ஞாஹ்ருதயம், ஸ்பந்த நிர்ணயம், ஸ்பந்த சந்தோஹம், சிவசூத்ர விமர்சினீ, ஸ்வச்சந்தோத்யோதம், நேத்ரோத்யோதம், விஜ்ஞான பைரவோத்யோதம், ஸ்தவசிந்தாமணிடீகை, பராபிர வேசிகா, தத்வ சந்தோஹம் ஆகியவை.

தர்க்கம் முதலான சாஸ்திரங்களில் பயிற்சி குன்றிய மக்களும் எளிதில் பிரத்யபிஜ்ஞைத் தத்துவத்தை உணர்ந்து சிவசமாவேசம் பெறுதற்குப் பயன்தரும் வகையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளதாக க்ஷேமராஜர் இந்நூலின் தொடக்கத்தில் கூறியுள்ளார்.

'பிரத்யபிஜ்ஞை' என்ற சொல் 'நினைவுகூர்தல்' என்னும் பொருள்படும். சீவன் மாயாவசத்தால், தான் சிவன் என்பதை உணராமல் இருக்கிருன். உடலையும் கரணங்களையும் தாஞக எண்ணுகிருன். இவ்வறியாமையை அவனுக்குணர்த்தி நான் சிவனன்றி வேறல்லன் என்னும் உண்மையறிவை அவன் மீண்டும் பெறுதற்குள்ள நெறிமுறைகளைக் கூறுவதே பிரத்யபிஜ்ஞா சாஸ்திரம்.

இந்நூலில் கூறப்பட்டுள்ள முக்கியமான கருத்துக்கள் கீழே தரப்பட்டுள்ளன. சித் அல்லது பராசம்வித் எனப்படுவதே பரம்

**

பொருள். அது இதுவெனும் வேறுபாடற்றது.' 'அஹம்' என்ற சைதன்யமே 'இதம்' என்ற பிரபஞ்சமாகத் தோன்றுகிறது. இப்பரம்பொருள் 'பிரகாச விமர்சமயமானது'. 'ஜ்யோதிஷாம் ஜ்யோதி:' என்று உபநிடதத்தில் கூறப்பட்டுள்ளவாறு சைதன்யம் ஒளிமயமானது. ஒளிவளர் விளக்காக இருந்துகொண்டு அனைத்தையும் விளக்குகிறது. அப்படிச் செய்யும் நிலையில் அது 'விமர்சம்' எனப்படுகிறது. இவ்விமர்சமே பராசக்தி யென்றும், ஸ்வாதந்த்ரியம் என்றும், ஸ்பந்தம் என்றும் பல வாருகப் பெயர் பெறுகிறது. பரம்பொருளினின்றும் சக்தியைப் பிரித்துக் காணவியலாது. இச் சைதன்யம் பிரபஞ்சத்தைக் கடந்தும் (விசுவோத்தீர்ணம்) பிரபஞ்சத்தில் உறைந்தும் (விசுவமயம்) இருப்பது. பெரிய ஆலமரம் சக்திரூபமாக ஆலவிதையில் நுண்ணிதாய் இருப்பது போல அப்பாலுக்கப்பாலாய் விரிந்துள்ள சராசரங்களடங்கிய இப்பிரபஞ்சம் பரம்பொருளின் இதயபீஜமாகிற சக்தியாய் இருக்கிறது என்கிருர் க்ஷேமராஜர் தமது பராபிரவேசிகா என்ற நூலில். பரமசிவனுக்கு ஐந்து சக்திகள் கூறப்பட்டுள்ளன. அவை (1) சித்சக்தி, (2) ஆனந்தம் அல்லது சுவாதந்திரிய சக்தி, (3) இச்சா சக்தி, (4) ஞான சக்தி, (5) கிரியா சக்தி. இவை ஐந்தும் முறையே சிவன், சக்தி, சதாசிவம் அல்லது சாதாக்யம், ஈசுவரன், சுத்தவித்தை ஆகியவற்ருேடு தொடர்புடையவை.

சிவ தத்துவம் என்பது பிரபஞ்சத் தோற்றத்திற்கு முன் பரமசிவனிடத்தில் தோன்றும் முதல் அசைவு (ஸ்பந்தம்) எனலாம். இது அவனுக்குள்ள சுதந்திரத்தன்மையினுல் இச்சாமாத்திரத்தே நிகழ்வது.

'நான்' 'இது' என்ற இரண்டும் ஒன்றிய நிலையிலுள்ள பரமசிவ னிடத்திலிருந்து 'இது' என்னும் அம்சத்தை (objective experience) விலக்கி, 'நான்' (subjective experience) ஒன்றே இருக்கும் நிலையை 'சக்தி தத்துவம்' தோற்றுவிக்கிறது. இந்நிலையில் அவன் அநாசிரித சிவன் ('இது' என்னும் அம்சத்தை ஆசிரயிக்காதவன்) என்று கூறப்படுகிருன்.

பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கத் தொடங்கும் நிலையில் சக்தி செயற்படத் தொடங்கி அது-இதுவாகிறது. ஆயினும் இரண்டும் பிரிக்க இயலாத நிலையில் இருக்கின்றன.

சதாசிவதத்துவத்தில் 'நான்' என்ற சைதன்யத்தில் 'இது' என்ற அம்சம் தெளிவற்ற நிலையில் காணப்படுகிறது. இது 'ஆபாசத்தின்' (தோற்றத்தின்) முதற்படி.

ஈசுவரதத்துவத்தில் 'இது' என்ற அம்சம் மேலும் தெளிவடைகிறது. இந்நிலையில் பிரபஞ்சம் 'உன்மேஷத்தை' (கண்திறத்தல்) அடைகிறது. 'நான் இது' என்ற கடந்த நிலை இப்போது 'இது நான்' என்று ஆகிறது.

சுத்த வித்தை நிலையில் தராசின் இரு தட்டுகளைப்போல் 'நான்' 'இது' என்ற சைதன்யத்தின் இரு அம்சங்களும் சமநிலையில் இருக்கின்றன. இரண்டும் வேறுபடுத்தி அறியப்பட்டாலும் கண்ணுடியில் காணப்படும் பொருளின் நிழல் போல 'இது', 'நான்' என்பதில் அடக்கமாகையால் இதை 'பேதாபேதவிமரிசனம்' என்பர்.

இவ்வைந்து தத்துவங்களும் சுத்தாத்துவாவின்பாற்படும்.

அடுத்துக் கூறப்படும் அசுத்தாத்துவாவில் முதலில் கூறப் படுபவை மாயையும் அதன் ஐந்து கஞ்சுகங்கள் (போர்வைகள்) ஆகிற கலை, (அசுத்த) வித்தை, ராகம், காலம், நியதி என்பன. இவை பரம்பொருளின் தன்மைகளான சர்வகர்த்ருத்வம், சர்வஜ்ஞத்வம், பூர்ணத்வம், நித்யத்வம், வியாபகத்வம் என்பவை உடல், கரணங்கள் முதலான உபாதிகளால் குறுக்கம் பெற்ற நிலையில், அப்பெயர் கொண்டழைக்கப்படுகின்றன.

சிவன் தன்னை மாயைக்குட்படுத்திக் கொண்டு ஐந்து கஞ்சுகங்களையும் ஏற்றுக்கொண்ட நிலையில் சீவன் அல்லது புருடன் என்றழைக்கப்படுகிருன். 'புருடன்' 'நான்' என்பதன் தோற்றமென்ருல் 'பிரகிருதி' 'இது' என்பதன் தோற்றமாகும். சாங்கியத்தில் கூறப்படுவது போல் 'பிரகிருதி' ஒன்றல்ல. த்ரிக சாஸ்திரத்தில் ஒவ்வொரு சீவனுக்கும் பிரகிருதி வேறுபட்டது. சைதன்யத்தின் ஞான, இச்சா, கிரியா சக்திகளே பிரகிருதியின் சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள்.

புத்தி, அகங்காரம், மனம், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து தன்மாத்திரைகள், ஐம்பூதங்கள் ஆகிய தத்துவங்களும் சாங்கியம், பிற சைவ நெறிகள் முதலானவற்றுள் கூறப்படுபவையே. ஆக தத்துவங்கள் முப்பத்தாறு.

ஆணவ மலம், மாயீய மலம், கார்ம மலம் என்று மும்மலங்கள் இங்கும் பேசப்படுகின்றன. ஆணவத்தால் கட்டுண்ட சைதன்யமே இங்கே 'அணு' எனப்படுகிறது. இங்கே 'அணு' என்பது அளவைக் குறிப்பதன்று. சிற்றறிவையும் சிறு ஆற்றலையும் பெற்றிருப்பதையே குறிப்பது.

சீவன் தன் சுய சொருபத்தை மீண்டும் உணர்வதே முத்தி. 'நான் சிவ சைதன்யம்' என்ற உணர்வு ஏற்படும்போது பிரபஞ்சமே

சிவானந்தமாகக் காட்சியளிக்கிறது, இதை 'ஜகதானந்தநிலை' என்பர்.

சீவனின் பக்குவ நிலைக்கேற்பவே 'சக்திபாதம்' தீவிரமாகவோ, மத்திமமாகவோ மந்தமாகவோ செயற்படும். முத்திநிலையும் அதற் கேற்பவே எய்தப்பெறும். 'சத்திபாதம்' நிகழ்வதற்கு சீவன் சில உபாயங்களை மேற்கொள்ளவேண்டும். அவ்வுபாயங்கள் சாம்பவோ பாயம், சாக்தோபாயம், ஆணவோபாயம் என்பன. இவை இந் நூலில் விளக்கப்பட்டுள்ளன. இவற்றில் மந்திரங்கள், யோக நெறிகள், குண்டலினியை எழுப்புதல் முதலியன இடம் பெறு கின்றன. பஞ்சக்ருத்யம் என்பது பரமனின் தொழில் மட்டுமல்ல, ஒவ்வொருவரும் இவ்வைந்தொழில்களை யொத்த தொழில்களைச் செய்கின்றனர் என்பது த்ரிகத்தில் காணப்படும் ஒரு சிறப்பு. இது 10, 11-வது சூத்திரங்களில் விளக்கப்பட்டுள்ளது. புறத்தே பார்த் திருப்பினும் பரமே பார்த்திருப்பர் என்ற நிலை யோகியரிடத்தில் காணப்படுதலை இந்நூல் கூறுகிறது. சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என்ற மலவசப்பட்ட உயிர்களும், மந்திரர், மந்திர மகேசுவரர், சிவன் என்ற அமலர்களான பிரமாதாக்களும் சுட்டப் படுகின்றனர்.

கட்டுக்களிளிலிருந்தும் விடுபட்ட சீவன் சீவன்முக்தனான நிலையில் 'स्वतन्त्रः स्वच्छात्मा स्फुरति सततं चेतसि शिवः' என்று அபிநவ குப்தர் கூறியுள்ளவாறு சுதந்திரனும் நிர்மல சைதன்யனுமான சிவன் அவனுள்ளத்தில் பிரகாசித்துக்கொண்டே யிருப்பான்.

நூலாசிரியர் இக் கருத்துக்களைத் தெளிவாக விளக்கிச் செல்கிறார். இந்நூலைத் தமிழில் மொழிபெயர்ப்பதில் பேராசிரியர் ஜெய்தேவ் சிங் அவர்களின் இந்நூலின் ஆங்கில ஆக்கமும் குறிப் புரையும் எனக்கு உறுதுணையாக இருந்தன. இப்பணியில் என்னை ஈடுபடுத்திய சென்னைப் பல்கலைக் கழகத்தாருக்கும் சிறப்பாக டாக்டர் S. இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு மேல் நிலைக் கல்வி நிறுவனத்தின் இயக்குநர் டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி அவர் களுக்கும் பெரிதும் கடப்பாடுடையேன். இப்பணியை மேற்கொள்ள அநுமதி தந்த தமிழ் சம்ஸ்கிருதம் பிற இந்திய மொழிகள் ஆராய்ச்சி நிறுவன ஆட்சியாளருக்கும் எனது நன்றி உரித்து.

சென்னை,
14—3—1978.

பெ. திருஞானசம்பந்தன்

## பொருளடக்கம்

ஓம

# பிரத்யபிஜ்ஞாஹ்ருதயம்

नमः शिवाय सततं पञ्चकृत्यविधायिने ।
चिदानन्दघनस्वात्मपरमार्थविभासिने ॥ १ ॥

(பொருள்)—எக்காலத்தும் (தோற்றுவித்தல், காத்தல், ஒடுக்குதல், மறைத்தல், அருளல் என்னும்) ஐம்பெரும் தொழில்களைச் செய்ப வனும், பேரறிவும் பேரின்பமும் குறைவிலா நிறைவாகப் பெற்றவனும், மேலான உண்மைப்பொருளை வெளிப்படுத்துவோனும், பரமாத்மாவு மான (எல்லா உயிர்களிலும் உயிராயுள்ள) சிவனுக்கு வணக்கம். (1)

(விளக்கம்)—'பிரத்யபிஜ்ஞை' என்ற சொல் 'மீண்டும் உணர்தல்' என்ற பொருள் கொண்டது. ஒரு மனிதன் தனக்கு உள்ள உடல் மனம் கரணங்கள் ஆகியவற்றால் தன்னைப் பரமாத்மாவினின்றும் வேருகக் கருதிவிடுகிருன். தானும் பரமாத்மாவும் ஒன்றே என்ற உணர்வை அவனுக்கு மீட்டுத்தரும் தத்துவ சாஸ்திரம்தான் 'பிரத்ய பிஜ்ஞாதரிசனம்' எனப்படுவது. இச்சாஸ்திரத்தின் சாரமான கருத்தைத் தருவதால் இந்நூல் 'பிரத்யபிஜ்ஞாஹ்ருதயம்' என்ற பெயர் கொண்டு விளங்குகிறது. எவனிடத்தில் எல்லாம் ஒடுங்கு கின்றனவோ (சீ=படுத்தல்), எவன் பாவங்களை வெட்டி வீழ்த்து கின்ருனோ (சோ=வெட்டுதல்), அவன் 'சிவன்' எனப்படுவான்.

உயிர்களிடத்தில் சிவன் கொண்டுள்ள அளப்பரும் கருணை யினுலே அவன் இடையருது ஐம்பெரும் தொழில்களைச் செய்து கொண்டே இருக்கிருன். அவை யாவும் அவன் அருட்செயல்களே. நடராஜர் திருவுருவம் இவ் வைந்தொழில்களையும் குறிப்பதாக 'உண்மை விளக்கம்' என்ற சிந்தாந்த சாஸ்திர ஆசிரியரும் பின் வரும் பாடலில் தெரிவிக்கிருர்.

'தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம், முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு'.

'மேலான உண்மை' அல்லது 'மெய்ப்பொருள்' தான் 'பரம்பொருள்' என்று சொல்லப்படுவது. அதை அறிவது மனிதனின் தலையாய குறிக்கோள். அதுவே பரம புருஷார்த்தம்.

'ஸ்வாத்மா' என்ற சொல்லிற்கு இரண்டு வகையாகப் பொருள் கொள்ளலாம். ஒன்று 'தான்' என்பது, மற்றொன்று 'உடைமை' யாகிற சீவன். தானே யாகிற பரமாத்மாவும், சீவனுக்குள்ளே இருக்கும் ஆத்மாவுமாக உள்ளது அப்பரம்பொருள்.

शाङ्करोपनिषत्सारप्रत्यभिज्ञामहोदधेः ।
क्षेमेणोद्ध्रियते सारः संसारविषशान्तये ॥ २ ॥

(பொ-ள்) 'சங்கரனைப் பற்றிய உபநிஷத்தின் சாரமாகிற பிரத்ய பிஜ்ஞை என்னும் பெருங்கடலிலிருந்து சம்சாரமாகிற விஷத்தைப் போக்குதற்கு சாரமான பொருள் க்ஷேமராஜரால் கடைந்தெடுத்துத் தரப்படுகிறது'. (2)

(வி-ம்) 'சங்கரோபநிஷத்' காச்மீர சிவாத்வய வாதத்தைக் குறிக்கும்.

इह ये सुकुमारमतयः अकृततीक्ष्णतर्कशास्त्रपरिश्रमाः शक्तिपातोन्मिषित-पारमेश्वरसमावेशाभिलाषिणः कतिचित् भक्तिभाजः, तेषां ईश्वरप्रत्यभिज्ञोपदेशतत्त्वं मनाक् उन्मील्यते ।

(பொ-ள்) 'தர்க்க சாஸ்திரத்தில் பயிற்சியில்லாத, நுண்மாண் நுழைபுலம் வாய்க்கப்பெறாத பக்திமான்கள் சிலர் இவ்வுலகில் இருக்கின்றார்கள். ஆனால் அவர்கள் (சிவனுடைய) சக்திபாதத்தினால் பரமேசுவரனோடு ஒன்றும் நிலையை அடையவேண்டும் என்ற பேரவா உடையவராக இருக்கின்றனர். அவர்கள் பொருட்டு 'ஈசுவரபிரத்யபிஜ்ஞை' என்ற நூலில் கூறப்பட்டுள்ள உபதேச தத்துவம் ஓரளவு சுருக்கமாக விளக்கப்படுகிறது.

(வி-ம்) 'ஈசுவர பிரத்யபிஜ்ஞை' என்ற நூலின் ஆசிரியர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த உத்பலாசாரியர். 'சமாவேசம்' என்ற சொல் 'ஐக்யம்' எனவும், உயிருக்கு தெய்வ 'ஆவேசம் உண்டாதல்' எனவும் பொருள் தரும். சீவத்தன்மை நீங்கிச் சிவமாம் தன்மையைப் பெறுதல் 'ஆவேசம்' என்பார் அபிநவகுப்தர்.

'சக்திபாதம்' என்பது சிவத்தோடு இணைபிரியாத சக்தி அல்லது அருள் சீவன்மீது படிதல் எனப் பொருள்படும். உயிருக்கு அருள் பாலித்தல் எனினும் ஒக்கும்.

तत्र स्वात्मदेवताया एव सर्वत्र कारणत्वं सुखोपायप्राप्यत्वं महाफलत्वं च अभिव्यङ्क्तुमाह—

चितिः स्वतन्त्रा विश्वसिद्धिहेतुः ॥ १ ॥

'विश्वस्य'—सदाशिवादेः भूम्यन्तस्य 'सिद्धौ'-निष्पत्तौ, प्रकाशने स्थित्यात्मनि, परप्रमातृविश्रान्त्यात्मनि च संहारे, पराशक्तिरूपा 'चितिः' भगवती 'स्वतन्त्रा' अनुत्तरविमर्शमयी शिवभट्टारकाभिन्ना 'हेतुः'—कारणम्। अस्यां हि प्रसरन्त्यां जगत् उन्मिषति व्यवतिष्ठते च, निवृत्तप्रसरायां च निमिषति;—इति स्वानुभव एव अत्र साक्षी। अन्यस्य तु मायाप्रकृत्यादेः चित्प्रकाशभिन्नस्य अप्रकाशमानत्वेन असत्त्वात् न क्वचिदपि हेतुत्वम्; प्रकाशमानत्वे तु प्रकाशैकात्म्यात् प्रकाशरूपा चितिरेव हेतुः; न त्वसौ कश्चित्। अत एव देशकालाकारा एतत्सृष्टा एतदनुप्राणिताश्च नैतत्स्वरूपं भेत्तुमलम्:—इति व्यापकनित्योदितपरिपूर्णरूपा इयम् इत्यर्थलभ्यमेव एतत्।

(பொ-ள்) பரமாத்ம தேவதையே அனைத்திற்கும் காரணமாயும், குறிக்கோளை அடைதற்கு எளிய உபாயமாயும் பெரும்பயனாயும் இருக்கிறது என்பதைக் கூற எழுந்தது பின்வரும் சூத்திரம்.

[சூ.1.] சுவதந்திரமான சைதன்யன் பிரபஞ்சசித்திக்கு ஏதுவாகும்.

'விசுவம்' என்பது சதாசிவ தத்துவம் முதலாக பூமிதத்துவம் வரையிலானது. அவற்றின் 'சித்தி' என்பது காரியம். காரியமாவது பிரகாசனம் (தோற்றுவித்தல்), ஸ்திதி (காத்தல்), சம்ஹாரம் அல்லது பரம ஞானியான பரமசிவனிடத்தில் ஒடுக்கம் ஆகியவை. இக் காரியங்களுக்கு ஏதுவாக இருப்பது பராசக்தி ரூபமான 'சிதி'. அதை 'சுதந்திரமான' பகவதீ என்றும் அழைப்பர். இதற்கு மேலான 'விமர்சம்' இல்லை. தலைவனான சிவனினின்றும் இது வேறுபட்டதன்று. இச்சக்தி செயல்படத் தொடங்கினால் உலகம் தோன்றுகிறது, இருக்கிறது. செயல் நின்றுவிட்டால் உலகம் மீண்டும் ஒடுங்குகிறது. ஒவ்வொருவருடைய சொந்த அனுபவத்

திலும் கூட இதைக் காணலாம். (நம்முடைய சைதன்யம் செயற் படும்போது உடல் செயற்படுகிறது, சைதன்யம் செயற்படாத துயிலும் நிலையில் உடல் செயலற்றுக் கிடக்கிறது).

மாயை என்றும் பிரகிருதி என்றும் அழைக்கப்படுகிற ஒன்றும், பிறவும், சித்தாகிய பிரகாசத்தினின்றும் வேறுபட்டு, அதாவது பிரகாசமின்றி யிருப்பவை யாகையால், அசத்தாகும்; ஆதலால் ஏதுவாகமாட்டா. அவை பிரகாசிக்குமேல் அந்நிலையில் பிரகாசத் தோடு ஒன்றிவிடுகின்றன என்பதாம். ஆகவே பிரகாசரூபமான சித்தே ஏதுவாகிறது, வேறெதுவுமன்று. ஆதலால்தான் இச் சித்திஞல் தோற்றுவிக்கப்பட்டவையும் ஊடுருவப்பட்டவையுமான தேசம், காலம், உருவம் முதலியன இச்சித்சொரூபத்தை ஊடுருவிச் செல்ல இயலா. இதனின்றும் இச்சித்தானது வியாபகமானதும், அஞதியே இருந்துவருவதும் முழுமையானதுமாகும் என்பது பெறப்பட்டது.

(வி-ம்) காச்மீர சைவத்திலும் 36 தத்துவங்கள் பேசப்படுகின்றன. அவை இரண்டு பிரிவாக உள்ளன. ஒன்றை 'சுத்தாத்வா' என்றும் மற்றதை 'அசுத்தாத்வா' என்றும் கூறுவர்.

1. சிவம்: இதில் 'சித்' அல்லது சைதன்யம் மிகுதி.

2. சக்தி: இது 'சித்சக்தி' எனப்படுவது. இதில் ஆனந்தம் மிகுதி. இவை இரண்டும் வேறுபடுத்த இயலாதவை, நித்திய மானவை. தோற்றுவிக்கப்படுபவற்றுள் உலகியலுக்கப்பாற் பட்ட தத்துவங்கள் 'சுத்தாத்வா' (தூய வழி) என்பதில் அடங்கும். அவையாவன.

சுத்தாத்துவா

3. சதாசிவம் (எக்காலத்தும் மங்களத்தைக் கொடுப்பவன்): இந் நிலையில் 'அகம்' என்ற உணர்வும் இச்சையும் மேலோங்கி நிற்பன. 'இது' என்ற உலகைப்பற்றிய உணர்வு குறைவு. இதில் உலகம் தெளிவாகப் புலப்படாது.

4. ஈசுவரன்: இந்நிலையில் 'அகம்' என்ற உணர்வும், உலகைப் பற்றிய உணர்வும் சமநிலையில் உள்ளன. ஞானசக்தி மேலோங்கி நிற்கிறது.

5. சுத்தவித்யை அல்லது சத்வித்யை (எல்லையற்ற ஞானம்): இந்நிலையில் 'நான் இப்பிரபஞ்சம்' என்ற உணர்வு எழுகிறது. இதில் கிரியாசக்தி மிகுதி. சிவதத்துவம் முதல் வித்யா தத்துவம் வரையிலுள்ள இவ்வைந்து தத்துவங்களும் சுத்த தத்துவங்கள் எனப்படுவன. அறிகின்றவன் நான், அறியப்படு பொருள் (பிரபஞ்சம்) என்ற வேறுபாடு ஓரளவு இருப்பினும் இரண்டும் ஒன்றிய நிலையே உணரப்படுவதால் இவை சுத்த தத்துவங்கள் என்று சொல்லப்படுகின்றன.

அசுத்தாத்துவா

6. மாயை: இது ஆத்ம சொரூபத்தை மறைக்கும் ஆற்றல் படைத்தது. பொருள்களின் பலவாம் தன்மையைத் தோற்று விப்பது.

7. கலை: இது சர்வகர்த்ருத்துவ சக்தியை (அனைத்தையும் செய்தலான ஆற்றலை) ஒரு கட்டுக்குட்படுத்துவது.

8. வித்யை: இது சர்வஜ்ஞத்துவ சக்தியை (அனைத்தையும் அறியும் ஆற்றலை) ஒரு கட்டுக்குட்படுத்துவது.

9. ராகம்: இது பூர்ணத்துவத்தைக் (வேண்டாமையை) கட்டுப் படுத்தி வேட்கையைத் தோற்றுவிப்பது.

10. காலம்: இது நித்யத்துவத்தை இறந்த காலம், நிகழ் காலம் எதிர் காலம் என்று கூறுபோடுவது.

11. நியதி: இது சுதந்திரத்துவம், வியாபகத்துவம் என்கிற தன்மைகளுக்கு கட்டுப்பாடு விதித்து குறிப்பிட்ட காரணம் இடம் என்று குறுகிய எல்லையை வகுப்பது.

மேலே குறிப்பிட்டுள்ள 7-11 தத்துவங்கள் இதே வரிசையில் அபிநவகுப்தரால் கொடுக்கப்பட்டுள்ளன. உத்பலாசாரியர், காலம், நியதி, ராகம், வித்யை, கலை என்று இவற்றை வரிசைப்படுத்துவார். சைவசித்தாந்திகள் காலம், நியதி, கலை, வித்தை, ராகம் என்று வரிசைப்படுத்துவர்.

12. புருஷன்: கலை முதல் நியதி ஈறான ஐந்து கஞ்சுகங்களை (சட்டைகளை)க் கொண்ட மாயையைப் போர்த்திக்கொண்டு குறைந்த ஆற்றலோடு கூடியதான பரம்பொருள் 'புருஷன்' என்று சொல்லப்படுகிறது.

13. பிரகிருதி: புத்தி முதல் பூமி ஈருக உள்ள தத்துவங்களுக்கு மூலமானது.

14-36. புத்தி, அகங்காரம், மனம், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து ஞானேந்திரியங்கள், வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்ற ஐந்து கர்மேந்திரியங்கள், சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்ற ஐந்து தன்மாத்திரைகள், ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி என்ற ஐம்பூதங்கள் ஆகியவை எஞ்சிய 23 தத்துவங்கள்.

சிவன், சக்தி என்று இரண்டு மூலதத்துவங்கள். சிவாபிவ்யக்தி உலகியலுக்கப்பாற்பட்ட நிலையில் (சுத்தாத்வாவில்) மூன்று தத்துவங்கள்: உலகியலுக்குட்பட்ட நிலையில் (அசுத்தாத்வாவில்) முப்பத்தோரு தத்துவங்கள்: ஆக முப்பத்தாறு தத்துவங்கள்.

சிவம் செயற்படும்போது சக்தி என்று பெயர் பெறுகிறது.

பரமேசுவரன் ஒளி உருவினன் (பிரகாசாத்மா).

'விமர்சம்' என்பது பரமசத்தான சுத்தாத்ம சைதன்யம். அதை மகேசுவரனின் 'சுதந்திரத்தன்மை' என்றும் கூறுவர். இவ்விமர்சத்தின் வழியே ஆக்கல், காத்தல், ஒடுக்குதல் என்ற மூன்று அவத்தைகள் ஏற்படுகின்றன. மூன்றவத்தைகளிலும் இருக்கிற இப்பிரபஞ்சம் 'நானே' என்ற உணர்வு இவ்விமர்சத்தில் ஏற்படுகிறது. மயிலின் பல்வேறு வண்ணங்களும் அமைப்புகளும் அது தோன்றிய முட்டையில் வேறுபாடற்ற நிலையில் காணப்படுவது போல, 'பல்வேறுபட்ட பிரபஞ்சமும் என்னுடைய தோற்றமே' என்ற உணர்வு மகேசுவரனுக்கு ஏற்படுவது அவனுடைய 'விமர்ச சுவபாவம்' எனப்படுவது. இதை சைதன்யம், ஸ்புரத்தை, ஸ்பந்தம், மகாசத்தை என்றெல்லாம் அழைப்பர்.

'சிவபட்டாரகர்' என்பது சிவனாகிய பர்த்தா (நாயகன்) என்ற பொருளில் வழங்குவது.

சிவபரம்பொருள் 'முடிவிலா அனாதிப்பொருள், என்றும் தொழிற்படும் (ஸ்பந்தம்) பொருள்' என்பதைக் குறிக்க 'நித்யோதிதன்' என்று குறிக்கப்படுகிறது.

ननु जगदपि चितो भिन्नं नैव किञ्चित्; अभेदे च कथं हेतुहेतुमद्भावः? उच्यते। चिदेव भगवती स्वच्छस्वतन्त्ररूपा तत्तदनन्तजगदात्मना स्फुरति—

इत्येतावत्परमार्थोऽयं कार्यकारणभावः । यतश्च इयमेव प्रमातृ-प्रमाण-प्रमेयमयस्य विश्वस्य सिद्धौ प्रकाशने हेतुः, ततोऽस्याः स्वतन्त्रापरिच्छिन्नस्वप्रकाशरूपायाः सिद्धौ प्रकाशने हेतुः, अभिनवार्थप्रकाशनरूपं न प्रमाणवराकमुपयुक्तम् उपपन्नं वा । तदुक्तं त्रिकसारे—

‘ स्वपदा स्वशिरश्छायां यद्वल्लङ्घितुमीहते ।
पादोद्देशे शिरो न स्यात्तथेयं बैन्दवी कला ॥ इति ।

यतश्च इयं विश्वस्य सिद्धौ पराद्वयसामरस्यापादनात्मनि च संहारे हेतुः, तत एव स्वतन्त्रा । प्रत्यभिज्ञातस्वातन्त्र्या सती, भोगमोक्षस्वरूपाणां विश्वसिद्धीनां हेतुः । —इति आवृत्त्या व्याख्येयम् ।

(பொ-ள்) ஒரு கேள்வி எழலாம். உலகு சைதன்யத்தினின்றும் வேறுபட்டதன்று என்று சொல்லப்படுகிறது; அப்படி அபேதமாயின் ஒன்று ஏது மற்றொன்று விளைவு என்பது யாங்ஙனம் ? இங்கே கூறப் படுகின்ற காரணகார்யபாவம் மிக மேலான பொருளிலே கொள்ளப் படுவதாகும். அதாவது, பிரமாதா (அறிகின்றவன்) பிரமாணம் (அறிவும் அதன் அளவையும்) பிரமேயம் (அறியப்படுபொருள்) என்பவற்றின் கூட்டான இப்பிரபஞ்சம் தோன்றுவதற்குக் காரண மாகவிருப்பது சைதன்யமே. சித்தாகிற இப்பகவதி ஒளியுடைய தாய் தன்னிச்சை மாத்திரத்தானே எண்ணற்ற இப்பிரஞ்சத்தைத் தோற்றுவிக்கிறது. ஆதலால் புதிதாக உலகில் தோன்றும் பொருளை விளக்கும் அற்ப பிரமாணம், ஸ்வதந்திரமானதும் முழுமையானதும் சுயம்பிரகாசமானதுமான சைதன்யம் பிரபஞ்சத்தைத் தோற்று விப்பதை விளக்குதற்கியலாது. இது ‘த்ரிகசாரம்’ என்ற நூலில் (பின்வருமாறு) கூறப்பட்டுள்ளது.

‘எப்படி ஒருவன் தன் தலையின் நிழலைத் தானே தாண்ட முயலும் போது அந்நிழல் காலில் அகப்படாதோ அதுபோலத்தான் பிந்து சம்பந்தப்பட்ட கலை.’

இச் சைதன்யம் சித்திக்குக் காரணமாக இருக்கிறது. சித்தி என்பது இங்கே சம்ஹாரம் என்ற பொருளில் கொள்ளப்படுகிறது; சம்ஹாரம் என்பது சைதன்யத்தோடு இரண்டற இருப்பது. அதை சுதந்திரதை (தன்னிச்சை வழியே தொழிற்படும் இயல்பு) என் கிறோம். இவ்வியல்பு உணரப்பட்ட நிலையில் அதுவே பிரபஞ்ச

சித்திக்குக் காரணமாக அமைகிறது;—இங்கே 'சித்தி' போகம் என்ற பொருளிலும் மோக்ஷம் என்ற பொருளிலும் ஆளப்படுகிறது. மேற்கண்ட சுலோகத்திற்கு இப்படியும் பொருள் கொள்ளலாம்.

अपि च 'विश्वं'—नील-सुख-देह-प्राणादि; तस्य या सिद्धिः प्रमाणोपारोहक्रमेण विमर्शमयप्रमात्रावेशः, सैव 'हेतुः'—परिज्ञाने उपायो यस्याः। अनेन च सुखोपायत्वमुक्तम्। यदुक्तं श्रीविज्ञानभट्टारके—

'ग्राह्यग्राहकसंवित्तिः सामान्या सर्वदेहिनाम्।
योगिनां तु विशेषोऽयं संबन्धे सावधानता॥' इति।

'चितिः' इति एकवचनं देशकालाद्यनवच्छिन्नतां अभिदधत् समस्तभेदवादानां अवास्तवतां व्यनक्ति। 'स्वतन्त्र' शब्दः ब्रह्मवादवैलक्षण्यं आचक्षाणः चितो माहेश्वर्यसारतां ब्रूते। 'विश्व' इत्यादिपदं अशेषशक्तित्वं, सर्वकारणत्वं, सुखोपायत्वं, महाफलं च आह॥ १॥

(பொ-ள்) மேலும் 'விச்வம்' என்பது நீலம் முதலான பண்புகளையும், சுகம் முதலான உணர்வுகளையும், தேகம் பிராணன் முதலான பொருள்களையும் கொண்ட பிரபஞ்சம். பிரபஞ்சத்தின் 'சித்தி' என்பது சைதன்யத்தை அளித்தற்கு உபாயமாகும். இங்கே 'சித்தி' என்ற சொல், பிரமேயம் (பிரமாணம், பிரமாதா) என்ற வகையில் படிப்படியாக மேலே சென்று காண்பதற்கான ஏது. இப்படி மேலே செல்வதை உணர்த்தும் சித்தி, 'ஆவேசம்' என்றும் கொள்ளத் தக்கது. ஆவேசம் என்பது பிரபஞ்சம் விமர்சமாகிற சைதன்யத்தில் ஒடுங்குவது. இதனால் சுகோபாயம் உணர்த்தப்பட்டது. இது விஜ்ஞான பட்டாரகத்தில் (விஜ்ஞான பைரவம்) கூறப்பட்டுள்ளது.

'பிரமாதா, பிரமேயம் என்பன பற்றிய அறிவு உடலுடன் கூடிய அனைவருக்கும் உண்டு. சிறப்பாக யோகிகள் இவற்றிற்கிடையே உள்ள தொடர்பை நன்கறிவார்கள்.'

'சிதி' என்ற சொல் ஒருமையில் பயன்படுத்தப்பட்டிருப்பது, அது தேசம், காலம் முதலிய எல்லைக்கோடுகளுக்கப்பாற்பட்டதென்பதைத் தெரிவிப்பதுடன், அனைத்துப் பேதவாதங்களின் உண்மையின்மையையும் குறிக்கிறது. 'ஸ்வதந்திரம்' என்ற சொல் (சங்கர) பிரம்மவாதத்தினின்றும் வேறுபட்டதென்பதையும், 'சித்'

மகேசுவரத்தன்மையின் சாரமாயிருப்பதென்பதையும் குறிக்கிறது. 'விச்வ' முதலான சொற்கள் எல்லையற்ற சக்தியையும், எல்லா வற்றிற்கும் காரணமாயிருப்பதையும், எளிய உபாயமாயிருப்பதையும் பெரும்பயனுயிருப்பதையும் குறிக்கும்.

(வி-ம்) 'பைந்தவீ கலை' என்பது சைதன்யத்தின் (பிந்துவின்) பேரறி வென்னும் பரபிரமாத்ருத்வ சக்தியாகும். இது என்றும் பிரமாதாவே, பிரமேயமாவதில்லை.

ननु, शिवस्य यदि चितिः हेतुः, तत् अस्या उपादानाद्यपेक्षायां भेद-वादापरित्यागः स्यात् इत्याशङ्क्य आह ।

स्वेच्छया स्वभित्तौ विश्वमुन्मीलयति ॥ २ ॥

'स्वेच्छया' न तु ब्रह्मादिवत् अन्येच्छया, तथैव च तु उपादानाद्यपेक्षया —एवं हि प्रागुक्तस्वातन्त्र्यहान्या चित्त्वमेव न घटेत—'स्वभित्तौ' न तु अन्यत्र क्वापि, प्राक् निर्णीतं 'विश्वं' दर्पणे नगरवत् अभिन्नमपि भिन्नमिव 'उन्मीलयति'। उन्मीलनं च अवस्थितस्यैव प्रकटीकरणम्। इत्यनेन जगतः प्रकाशैकात्म्येन अवस्थानं उक्तम् ॥ २ ॥

(பொ-ள்) பிரபஞ்சத்திற்குச் சைதன்யம் காரணமானுல், அதற்கு உபாதானகாரணம் தேவைப்படுவதால் பேதவாதத்தை மேற்கொள்ள வேண்டிவருமே என்ற தடைக்கு விடையாக அடுத்த சூத்திரம் எழுகிறது.

[சூ. 2] 'தனது இச்சாசக்தியாலே (சித்) தன்னையே சுவராகக் (ஆதாரமாக) கொண்டு பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கிறது.'

'தனது இச்சாசக்தியாலே' என்றதனுல் பிரம்மம் முதலானது போல் மற்ருென்றின் விருப்பப்படி என்பதாகாது; 'தன்னையே ஆதாரமாகக்கொண்டு' என்பதால் வேறு உபாதான காரணம் (மூலப்பொருள்) தேவையின்றியே என்ருகிறது. அல்லாவிடில் சித்தின் சுதந்திரத்தன்மைக்கே கேடு விளையும், சித்தின் தத்துவமே இல்லை யென்ருகிவிடும். முன்பு கூறப்பட்ட 'விசுவம்' (சதாசிவம் முதல் பூமி ஈருகக் கூறப்பட்ட தத்துவங்கள்) கண்ணுடியில் பிரதி பலிக்கும் நகரம் போல அபேதமாக இருந்தும் வேறு பொருள் போல் தோன்றுகிறது. 'உன்மீலனம்' என்பது (சித்தில்) சூக்குமமாக

இருக்கும் பொருள் வெளிப்பாடு அடைவது என்பதாகும். இதிலிருந்து பெறப்படுவது, சித்தில் அடங்கியுள்ள பிரபஞ்சம் அதன் பிரகாசத்தி னின்றும் பிறிதன்று என்பதுவே.

अथ विश्वस्य स्वरूपं विभागेन प्रतिपादयितुमाह ।

तन्नाना अनुरूपग्राह्यग्राहकभेदात् ॥ ३ ॥

'तत्' विश्वं 'नाना' अनेकप्रकारम् । कथं 'अनुरूपाणां'—परस्परौचित्यावस्थितीनां 'ग्राह्याणां ग्राहकाणां' च 'भेदात्'—वैचित्र्यात् । तथा च सदाशिवतत्त्वे अहन्ताच्छादित–अस्फुटेदन्तामयं यादृशं परापररूपं विश्वं ग्राह्यं, तादृगेव श्रीसदाशिवभट्टारकाधिष्ठितो मन्त्रमहेश्वराख्यः प्रमातृवर्गः परमेश्वरेच्छावकल्पिततथावस्थानः । ईश्वरतत्त्वे स्फुटेदन्ताहन्तासामानाधिकरण्यात्म यादृक् विश्वं ग्राह्यं, तथाविध एव ईश्वरभट्टारकाधिष्ठितो मन्त्रेश्वरवर्गः । विद्यापदे श्रीमदनन्तभट्टारकाधिष्ठिता बहुशाखावान्तरभेदभिन्ना यथाभूता मन्त्राः प्रमातारः तथाभूतमेव भेदैकसारं विश्वमपि प्रमेयम् । मायोर्ध्वे यादृशा विज्ञानाकलाः कर्तृताशून्यशुद्धबोधात्मानः, तादृगेव तदभेदसारं सकलप्रलयाकलात्मक–पूर्वावस्थापरिचितम् एषां प्रमेयम् । मायायां शून्यप्रमातॄणां प्रलयकेवलिनां स्वोचितं प्रलीनकल्पं प्रमेयम् । क्षितिपर्यन्तावस्थितानां तु सकलानां सर्वतो भिन्नानां परिमितानां तथाभूतमेव प्रमेयम् । तदुत्तीर्णशिवभट्टारकस्य प्रकाशैकवपुषः प्रकाशैकरूपा एव भावाः । श्रीमत्परमशिवस्य पुनः विश्वोत्तीर्ण-विश्वात्मक - परमानन्दमय-प्रकाशैकघनस्य एवंविधमेव शिवादिधरण्यन्तम् अखिलं अभेदेनैव स्फुरति; न तु वस्तुतः अन्यत् किंचित् ग्राह्यं ग्राहकं वा ; अपि तु श्रीपरमशिवभट्टारक एव इत्थं नानावैचित्र्यसहस्रैः स्फुरति इत्यभिहितप्रायम् ॥ ३ ॥

(பொ-ள்) இனி, பிரபஞ்சத்தின் சொரூபத்தைப் பாகுபடுத்தித் தெளிவுறுத்தற்கு எழுந்தது பின்வரும் சூத்திரம்.

[சூ.3] அது (பிரபஞ்சம்) ஏற்புடைய அறிவோன் அறியப்படு பொருள் என்பவற்றிற்கிடையே உள்ள வேறுபாட்டினுல் பல வகை யாகக் காணப்படுகிறது.

'அது' என்பது பிரபஞ்சம்; அது பல வகையானது. இயை புடைய அறிவோனும் (பிரமாதா) அறியப்படுபொருளும் (பிரமேயம்)

என்றவற்றிற்கிடையே உள்ள வேறுபாடே அதற்குக் காரணம். அது பின்வருமாறு—சதாசிவ தத்துவத்தில் 'நானே இப்பிரபஞ்சம்' என்ற வகையில் சைதன்யம் மிகுதியாக நிற்கவும் இதுவாகிற பிரபஞ்சம் தெளிவற்றிருக்கவும் காண்கிறோம். காணப்படும் பொருளாகிற பிரபஞ்சம் சைதன்யத்தினின்றும் வேறுபட்டும் ஒன்றியும் இருக்கிறது. இந்த நிலையில் ஸ்ரீசதாசிவபட்டாரகரால் அதிட்டிக்கப்பட்ட மந்த்ரமஹேசுவரர்கள் அறிவோர்களாக இருக்கிறார்கள். இவர்கள் பரமேசுவரனுடைய இச்சாமாத்திரத்தினாலே அந்நிலையை அடையப் பெற்றவர்கள்.

ஈசுவர தத்துவத்திலும் 'நானே இப்பிரபஞ்சம்' என்று பிரபஞ்சம் அறியப்படுபொருளாக இருப்பினும், இந்நிலையில் 'நான்' எனப்படும் சைதன்யமும் 'இது' எனப்படும் பிரபஞ்சமும் சமநிலையில் தெளிவாகக் காணப்படுகின்றன. இந்நிலையில் ஈசுவரபட்டாரகரால் அதிட்டிக்கப் பட்ட மந்த்ரேசுவரர்கள் அறிவோர்களாக இருக்கிறார்கள்.

சுத்த வித்யை நிலையில் ஸ்ரீமான் அனந்தபட்டாரகரால் அதிட்டிக்கப்பட்ட பல வேறு பிரிவுகளையும் உட்பிரிவுகளையும் கொண்ட மந்த்ரர்கள் அறிவோர்களாக இருக்கிறார்கள். இந் நிலையில் வேறுபாடு மிகுந்த பிரபஞ்சம் அறியப்படுபொருளாகிறது.

மாயா தத்துவத்தின் மேல் நிலையில் (சுத்தவித்தைக்குக் கீழே) இருப்பவர்கள் விஞ்ஞானகலர். இவர்களிடத்தில் கர்த்ருத்வம் இல்லை; அறிதற்றொழில் (போதம்) ஒன்றே உளது. அவர்களின் அறியப்பெறுகின்ற பொருளாக (பிரமேயம்) இருப்பது தங்களுடைய கழிந்தகால பிரளயாகலர், சகலர் என்ற நிலைகளே. மாயாதத்துவ நிலையில் அறிவோராகிய பிரளயாகலரின் அறியப்படுபொருளாக இருப்பது சூனியம். அது பிரளயநிலையையே பெரிதும் சார்ந்ததாகும்

(மாயைதொடங்கி) பூமி இறுதியாக உள்ள தத்துவ நிலைகளில் அறிவோராயிருப்பவர்கள் சகலர்கள். அவர்கள் பெரிதும் வேறுபட்ட நிலையினர், குறுகிய ஆற்றலுடையவர்கள். அவர்கள் அறியும் பொருளும் குறுகிய எல்லைக்குட்படுவனவே.

இத்தத்துவங்களனைத்திற்கும் அப்பாற்பட்டவரும் பிரகாசத்தையே உருவாகக் கொண்டவருமான பரமசிவனுடைய நிலைகள் பிரகாசம் ஒன்றையே வடிவாகக் கொண்டன. பிரபஞ்சத்திற் கப்பாற்பட்டும் பிரபஞ்சமயமாகவும் பரமானந்தமயமாகவும் செறிந்த பிரகாசமே உருவாகவும் கொண்ட பரமசிவனுக்கு அறிபொருளா

யுள்ள சிவன் முதலாக பூமி ஈருக உள்ள அனைத்தும் தன்னினும் வேறுபாடற்றதாகவே தோன்றுகிறது. (அந்நிலையில்) உண்மை யிலேயே அறிவோன் அறியப்படுபொருள் என்பதாக வேறென்றும் இல்லை; ஆனல் பரமசிவனே பல்லாயிர வேறுபாடுகள் கொண்ட இவையனைத்துமாய்த் தோற்றமளிக்கிருன் என்று கூறிவிடலாம்.

(வி-ம்) 'சதாசிவ' தத்துவத்தில் 'நான் இப்பிரபஞ்சமாயிருக்கிறேன்' என்று கருதும் போது 'இருத்தல்' என்பது உணரப்படுவதால் ('சத்' 'இருத்தல்' என்னும் 'ஆக்யா' 'ஞானம்' ஏற்படுவதால்) இதையே 'சாதாக்ய'தத்துவம் என்றும் கூறுவர். சதாசிவ தத்துவத்தில் 'நான் இது' என்ற உணர்வும், ஈசுவர தத்துவத்தில் 'இது நான்' என்ற உணர்வும் தோன்றுகின்றன. சுத்தவித்யா தத்துவத்தில் 'நான் நானே', 'இது இதுவே' என்ற வேறுபாட்டுணர்வு பிறக்கிறது. விஞ்ஞாணகலருக்கு 'நான்' என்ற உணர்வோ 'இது' என்ற உணர்வோ தெளிவாகப் புலப்படுவதில்லை. அது சுழுத்தி நிலையனு பவம் போன்ற ஒரு தெளிவற்ற நிலை. சகல நிலையில் தேவரும் மனிதரும் 'ஆத்மா' பற்றிய அறிவற்றவர்களாக, பேத உணர்வு மிக்கவர்களாகக் காட்சியளிக்கின்றனர். சிவன் அறிவோனக (பிரமாதா) இருக்கின்ற நிலையில் 'விமர்சம்' அடங்கியும் 'பிரகாசம்' ஓங்கியும் காணப்படுகிறது. விஞ்ஞாணகலர், பிரளயாகலர், சகலர் ஆகிய நிலைகளில் அதிட்டான தேவதை இல்லை; ஏனெனில் மகா மாயை செயல் புரியத் தொடங்கிவிடுகிறது. ஆணவம் மாயை கர்மம் என்ற மும்மலங்களை உடையவர் சகலர்; ஆணவமும் மாயையும் பிரளயகாலத்தில் கொண்டிருப்பவர் பிரளயாகலர்; ஆணவம் மட்டுமே எஞ்சியுள்ள நிலையில் விசேடமான ஞானம் பெற்றவர் விஞ்ஞாணகலர்.

यथा च भगवान् विश्वशरीरः, तथा

चितिसंकोचात्मा चेतनोऽपि संकुचितविश्वमयः ॥ ४ ॥

श्रीपरमशिवः स्वात्मैक्येन स्थितं विश्वं सदाशिवाद्युचितेन रूपेण अवबिभासयिषुः पूर्वं चिदैक्याख्यातिमयानाश्रितशिवपर्यायशून्यातिशून्यात्मतया प्रकाशाभेदेन प्रकाशमानतया स्फुरति ; ततः चिद्रसाश्यानतारूपाशेषतत्त्व-भुवन - भाव - तत्तत्प्रमात्राद्यात्मतयापि प्रथते । यथा च एवं भगवान् विश्वशरीरः, तथा 'चितिसंकोचात्मा' संकुचितचिद्रूपः 'चेतनो' ग्राहकोऽपि वटधानिकावत् संकुचिताशेषविश्वरूपः । तथा च सिद्धान्तवचनम्—

'विग्रहो विग्रही चैव सर्वविग्रहविग्रही ।' इति । त्रिशिरोमतेऽपि–

'सर्वदेवमयः कायस्तं चेदानीं शृणु प्रिये ।
पृथिवी कठिनत्वेन द्रवत्वेऽम्भः प्रकीर्तितम् ॥' इत्युपक्रम्य,

'त्रिशिरोभैरवः साक्षाद्व्याप्य विश्वं व्यवस्थितः ॥' इत्यन्तेन
ग्रन्थेन ग्राहकस्य संकुचितविश्वमयत्वमेव व्याहरति ।

(பொ-ள்) இறைவன் பிரபஞ்சத்தையே சரீரமாகக் கொண்டுள்ளான்.

[சூ. 4.] 'ஓர் எல்லேக்குட்படுத்தப்பட்டுள்ள சீவாத்மா குறுகிய சைதன்யத்தை உடையதாயிருக்கிறது; அதன் உடலும் குறுகிய பிரபஞ்சத்தாலாகியது.'

ஸ்ரீபரமசிவன் தன்னுடன் ஐக்கிய நிலேயிலுள்ள பிரபஞ்சத்தை 'சதாசிவம்' முதலான ஏற்றதொரு உருவத்தைக்கொண்டு வெளிப் படுத்த விருப்பம் கொள்கிருர். முதலில் 'சித் ஒன்றே'யாக தான் இருப்பதாக அறியாத நிலே; அதை அநாசிரித (ஆசிரயமற்ற) சிவம் என்றும் கூறுவர். (பிரபஞ்சம் புறத்தோற்றமாகக் காணப்படாத) அந்த நிலேயில் சூன்யத்தைக் காட்டிலும் அதிசூன்யமாய் இருக்கிருர். அப்போது பிரகாசமேயாகப் பிரகாசிக்கிருர். பிறகு சைதன்யமே பருப்பொருளாக உருக்கொண்டதுபோல எல்லாத் தத்துவங்களாய், புவனங்களாய், (போகப்) பொருள்களாய், அவ்வப்பொருளே அறிகின்றவர்களாயும் விரிகிருர். எங்ஙனம் பகவான் பிரபஞ்சம் முழுதையும் சரீரமாகக் கொண்டுள்ளாரோ அங்ஙனம் குறுகிய சைதன்யத்தோடு கூடிய சீவனும் குறுகிய சைதன்யரூபனுய் அறிவோனுய் ஆலவிதைபோல குறுகிய பிரபஞ்சவடிவினனுகிருன்.

இதுபற்றி (காச்மீர சைவ) சித்தாந்தம் கூறுவது—

'ஒவ்வோருடலும் அதனைக் கொண்டுள்ள உயிரும் எல்லா உடலுமாய் அனைத்தின் உயிருமாய் இருக்கின்றது'

த்ரிசிரோமதத்திலும் அறிவோன் குறுகிய பிரபஞ்சமயமாக இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது, அப்பகுதி,

'அன்பே! (பார்வதி) கேள், உடல் அனைத்து தேவர்கள் மயமானது. அது திடப்பொருளாக இருந்தால் பூமி என்றும் திரவப்பொருளாக இருந்தால் நீர் என்றும் கூறப்படுகிறது' என்று தொடங்கி,

'மூன்று தலையுடைய பைரவர் தானே இப்பிரபஞ்சத்தை வியாபித்திருக்கிறார்'. என்று முடிகிறது.

(வி-ம்) 'அனுசிரிதசிவம்' என்ற நிலை 'சக்தி' தத்துவத்திற்குக் கீழே 'சதாசிவ' தத்துவத்திற்கு மேலே இருப்பது. இந்நிலையில் சக்தி, சைதன்யத்தைத் தற்காலிகமாக மறைப்பதோடு, பிரபஞ்சத்தையும் தன்னிடமிருந்து ஒதுக்கிவைக்கிறது.

'சர்வதேவமயமாக உடல் இருக்கிறது' என்பதன் பொருள் அதுவே அறிவோர்களாகவும் எல்லா அறியப்படு பொருள்களாகவும் இருக்கிறது என்பதாகும்.

பைரவரின் 'மூன்று தலைகள்' பரை, பராபரை, அபரை என்ற மூன்று சக்திகளைக் குறிக்கும். பரை, சிவனுக்கும் சக்திக்கும் அபேதத்தை உணர்த்தும், பராபரை, இவ்விரண்டும் வேறுபாட்டிற்கிடை ஒன்றிய நிலையைக் குறிக்கும்; அபரை வேறுபாட்டைக் குறிக்கும். 'பைரவர்' என்ற சொல் முத்தொழிலைக் குறிப்பது. 'பை' என்பது 'பரணம்' அல்லது காத்தலைக் குறிக்கும்; 'ர' என்பது 'ரவணம்' அல்லது ஒடுக்கத்தைக் குறிக்கும்; 'வ' என்பது 'வமனம்' அல்லது மீண்டும் தோற்றுவித்தலைக் குறிக்கும்.

अयं च अत्राशयः—ग्राहकोऽपि अयं प्रकाशैकात्म्येन उक्तागमयुक्त्या च विश्वशरीरशिवैकरूप एव, केवलं तन्मायाशक्त्या अनभिव्यक्तस्वरूपत्वात् संकुचित इव आभाति ; संकोचोऽपि विचार्यमाणः चिदैकात्म्येन प्रथमानत्वात् चिन्मय एव, अन्यथा तु न किंचित्—इति सर्वो ग्राहको विश्वशरीरः शिवभट्टारक एव । तदुक्तं मयैव—

'अख्यातिर्यदि न ख्याति ख्यातिरेवावशिष्यते ।
ख्याति चेत् ख्यातिरूपत्वात् ख्यातिरेवावशिष्यते ॥' इति ।

अनेनैव आशयेन श्रीस्पन्दशास्त्रेषु—

'यस्मात्सर्वमयो जीवः..................... ।' इत्युपक्रम्य,
'तेन शब्दार्थचिन्तासु न सावस्था न यः शिवः ॥'

इत्यादिना शिवजीवयोरभेद एव उक्तः । एतत्तत्त्वपरिज्ञानमेव मुक्तिः, एतत्तत्त्वापरिज्ञानमेव च बन्धः; इति भविष्यति एव एतत् ॥ ४ ॥

(பொ-ள்) இங்கே கூறப்படும் கருத்து இதுவே. அறிவோனுக இருப்பவன் அனைத்துப் பிரபஞ்சத்தையும் சரீரமாகக் கொண்ட சிவனே. அவனுடைய சொரூபம் 'பிரகாசத்தினின்றும்' பிறிதன்று; மேலே காட்டப்பட்ட ஆகம வாக்கியங்களும் இதையே வலியுறுத்துவன. அவனுடைய மாயா சக்தியால்தான் இயல்பான சொருபம் வெளிப்படாது குறுகியதுபோல் தோன்றுகிறது. கூர்ந்து பார்த்தால் இக்குறுக்கமும் சைதன்யமே, ஏனெனில், வெளிப்பாடும் சைதன்யரூபமாகவே இருக்கிறது. அல்லாவிடில் அது சூன்யம் என்றுகிவிடும். ஆகவே, ஒவ்வொரு அறிவனும் பிரபஞ்சத்தைச் சரீரமாக உடைய சிவபட்டாரகனே. இது இந்நூலாசிரியரால் பிறிதோர் இடத்தில் சொல்லப்பட்டுள்ளது.

'அக்யாதி (அறியாமை) என்ற ஒன்று எப்போதும் அறியப்படு பொருள் அல்லவானுல் எஞ்சியிருப்பது அறிவுதான். அக்யாதி அறியப்படுகின்ற ஒன்று என்பதானுல், அதுவும் அறிவு ரூபமாகி விடுகிறது; அவ்வறிவே எஞ்சி நிற்பதாகிறது.

இக்கருத்தை யொட்டியே ஸ்பந்த சாஸ்திரங்களில் சிவனுக்கும் சீவனுக்கும் அபேதம் கூறப்பட்டுள்ளது. இவ்வுண்மை ஞானத்தைப் பெறுதலே முத்தி; அறியாமையே பந்தம் என்றுகிறது. அங்கே கூறப்பட்டுள்ளதாவது—

'எந்த காரணத்திஞல் சீவன் அனைத்துப் பிரபஞ்சமாய் இருக்கிருன்'......என்று தொடங்கி,

'ஆகவே சொல், பொருள், சிந்தனை ஆகியவற்றில் சிவனை யல்லாது வேறு எந்த நிலையும் இல்லை' என்று கூறப்பட்டுள்ளது.' [ஸ்பந்த காரிகை, நிஷ்யந்தம் 2, காரிகை 3, 4.]

ननु ग्राहकोऽयं विकल्पमयः, विकल्पनं च चित्तहेतुकं; सति च चित्ते, कथमस्य शिवात्मकत्वम्? इति शङ्कित्वा चित्तमेव निर्णेतुमाह।

चितिरेव चेतनपदादवरूढा चेत्यसंकोचिनी चित्तम् ॥ ५ ॥

न चित्तं नाम अन्यत् किंचित्, अपि तु सैव भगवती तत्। तथा हि, सा स्वं स्वरूपं गोपयित्वा यदा संकोचं गृह्णाति, तदा द्वयी गतिः; कदाचित् उल्लसितमपि संकोचं गुणीकृत्य चित्प्राधान्येन स्फुरति, कदाचित् संकोचप्रधानतया।

चित्प्राधान्यपक्षे सहजे, प्रकाशमात्रप्रधानत्वे विज्ञानाकलता ; प्रकाशपरामर्शप्रधानत्वे तु विद्याप्रमातृता । तत्रापि क्रमेण संकोचस्य तनुतायाम्, ईश-सदाशिवानाश्रित-रूपता । समाधिप्रयत्नोपार्जिते तु चित्प्रधानत्वे शुद्धाध्वप्रमातृता क्रमात्क्रमं प्रकर्ष-वती । संकोचप्राधान्ये तु शून्यादिप्रमातृता । एवमवस्थिते सति, 'चितिरेव' संकुचितग्राहकरूपा 'चेतनपदात् अवरूढा' अर्थग्रहणोन्मुखी सती 'चेत्येन' नील-सुखादिना 'संकोचिनी' उभयसंकोचसंकुचितैव चित्तम् । तथा च—

'स्वाङ्गरूपेषु भावेषु पत्युर्ज्ञानं क्रिया च या ।
मायातृतीये ते एव पशोः सत्त्वं रजस्तमः ॥'

इत्यादिना स्वातन्त्र्यात्मा चितिशक्तिरेव ज्ञानक्रियामायाशक्तिरूपा पशु-दशायां संकोचप्रकर्षात् सत्त्वरजस्तमःस्वभावचित्तात्मतया स्फुरति ; इति श्रीप्रत्यभि-ज्ञायामुक्तम् । अत एव श्रीतत्त्वगर्भस्तोत्रे विकल्पदशायामपि तात्त्विकस्वरूपसद्भा-वात् तदनुसरणाभिप्रायेण उक्तम्—

'अत एव तु ये केचित्परमार्थानुसारिणः ।
तेषां तत्र स्वरूपस्य स्वज्योतिष्ट्वं न लुप्यते ॥' इति ॥ ५ ॥

(பொ-ள்) ஒரு தடை எழக்கூடும். அறிவோன் விகல்பமயமானவன், விகல்பித்தல் சித்தத்தின் செயல்; சித்தம் செயற்படும்போது அறிவோன் சிவசொரூபன் என்பது யாங்ஙனம்? இத்தடைக்கு விடை கூறு முகத்தான் 'சித்தம்' என்பது என்ன என்பது அடுத்து உறுதி செய்யப்படுகிறது.

[சூ. 5] 'சித்' (பரம சைதன்யம்) (பொருள்களை அறியும் நிலையாகிற) சேதனத்திலிருந்து இறங்கி 'சித்தம்' (சீவசைதன்யம்) ஆகிறது; அப்படி ஆகும்போது காணப்படும் பொருளை (சேத்யம்) யொட்டி குறுகிய சித்தே சித்தம் என்று அழைக்கப்படுகிறது.

உண்மையிலே சித்தம் (சீவசைதன்யம்) பிறிதொன்றல்ல, அதே பகவானுடைய சைதன்யமே. எப்படியெனில், அப் பரமசைதன்யம் தன் சொரூபத்தை மறைத்துக்கொண்டு குறுக்கிக்கொள்ளும்போது இருவகையில் காட்சியளிக்கிறது. ஒரு சமயம் குறுக்கம் தோன்றிய போது அது அடங்கியிருக்க, சித்தே பிரதானமாகப் பிரகாசிக்கிறது; வேறு சில சமயம் குறுக்கம் பிரதானமாகப் பிரகாசிக்கிறது.

இயல்பான நிலையில் சித்தே பிரதானமாக இருக்கும்போது (விமர்ச மின்றி) 'பிரகாசமே' பிரதானமாக இருக்கவும், அறிவோன் (பிரமாதா) விஞ்ஞானகலர் நிலையை எய்துகிறுன். 'பிரகாசம்', 'விமர்சம்' இரண்டும் பிரதானமாக இருக்கும்போது அறிவோன் 'வித்யாபிரமாதா' என்றழைக்கப்படுகிறுன். இந்த நிலையிலும் சைதன்யக் குறுக்கம் படிப்படியாக ஏற்படும்போது ஈசன், சதாசிவம், அநாசிரிதசிவன் என்றழைக்கப்படுகிறது. சைதன்ய பிராதான்யம் சமாதி நிலையில் முயன்று எய்தப்பெறுமானுல், படிப்படியாக சுத்தாத்துவாவில் அறிவோன் தன்மை உயர்நிலையை எட்டுகிறது. சைதன்யக் குறுக்கம் பிரதானமாயிருக்கும்போது அறிவோன் தன்மை 'சூன்யம்' முதலானவை யாகின்றது.

இது இவ்வாறிருக்க, பரம சைதன்யமே குறுகிய நிலையில் அறிவோனுக 'சேதன' நிலையினின்றும் இறங்கி, நிலம், சுகம் முதலான வகைகளில் அறியப்படுவனவாக உள்ள பொருள்களை அறிய முற்படுகிறது. இப்படி (நீலம் முதலான புறப்பொருள்களையும் சுகம் முதலான அகப்பொருள்களையும்) குறுகிய நிலையில் நின்று அறியும் சித்தை 'சங்கோசினீ' என்றழைக்கிறேம். 'அதுவே சித்தம்'. இது (உத்பலதேவரின்) பிரத்யபிஜ்ஞையில் (ஈசுவர பிரத்யபிஜ்ஞை) கீழ்க்கண்டவாறு சொல்லப்பட்டுள்ளது.

'பதியாகிற சிவனுடைய சொரூப தத்துவங்களாகிற ஞானம், **கிரியை, மாயை என்ற மூன்றும் பசுவாகிற சீவனில் சத்துவம், ரஜஸ், தமஸ் என்றழைக்கப்படுகின்றன.'**

இதுபோன்ற கூற்றுக்களினின்றும் நாம் அறிவது, சுதந்திர பரமாத்மாவின் ஞானசக்தி, கிரியாசக்தி, மாயாசக்தி என்று வழங்கப்படுகின்ற ஆழ்ந்த சித்சக்தியே, சீவநிலையில் குறுக்க மிகுதியால் சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற இயல்புகளைக் கொண்ட சீவசைதன்யமாகக் காட்சியளிக்கிறது என்பதாகும். இதைக் கருத்தில் கொண்டே ஸ்ரீதத்வகர்ப்பஸ்தோத்திரத்தில் விகல்ப நிலையிலும் சிவதத்துவ சொரூபமே இருப்பதால் அத்தத்துவத்தைக் கண்டறிவது பற்றிப் பின்வரும் கூற்று காணப்படுகிறது—

'ஆதலால் எவர்கள் அந்த மேலான தத்துவத்தைக் கண்டறிவதில் ஈடுபட்டிருக்கிறுர்களோ அவர்களுள்ளே அப் பரஞ்சோதி என்றும் மறைவதில்லை.'

(வி-ம்) 'விகல்பம்' என்பது ஒன்றை மற்றொன்றினின்றும் 'அதுவன்று' என்று பிரித்துக் காண்டல். இப்படிப் பிரித்துக் காண்பது சித்தத்தின் தொழில். குடத்தைக் குடமல்லாதவற்றினின்றும் பிரித்துக் காண்பது விகல்பம். பதஞ்சலி யோகசூத்திரத்தில் (சமாதிபாதம், சூ. 9) கூறப்படுகின்ற 'அல்லாத ஒன்றை உளதாக எண்ணும் மயக்கமாகிற விகல்பத்தினின்றும்' இது மாறுபட்டது.

'வித்யாபிரமாதா' எனப்படுவோர் வித்யா தத்துவத்தில் அறிவோர்களாக இருக்கின்ற மந்திரர்கள், மந்திரேசுவரர்கள், மந்திரமகேசுவரர்கள் ஆகியோர்.

சைதன்ய பிராதான்யம் 'வித்யாபிரமாதாக்களுக்கும்' 'சுத்தாத்துவா பிரமாதாக்களுக்கும்' பொதுவேயாகிலும், முன்னையோருக்கு அது இயல்பானது, பின்னையோருக்கு சமாதியால் பெறப்படுவது.

சத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் சாங்கியரின் பிரகிருதி யமைப்பின் கூறுகள். இவற்றின் இலக்கணத்தை பகவத்கீதை (18, 26-28)யில் காணலாம்.

चित्तमेव तु मायाप्रमातुः स्वरूपम् इत्याह—

तन्मयो मायाप्रमाता ॥ ६ ॥

देहप्राणपदं तावत् चित्तप्रधानमेव ; शून्यभूमिरपि चित्तसंस्कारवत्येव ; अन्यथा ततो व्युत्थितस्य स्वकर्तव्यानुधावनाभावः स्यात्—इति चित्तमय एव मायीयः प्रमाता । अमुनैव आशयेन शिवसूत्रेषु वस्तुवृत्तानुसारेण ' चैतन्यमात्मा ' (१-१) इत्यभिधाय, मायाप्रमातृलक्षणावसरे पुनः ' चित्तमात्मा ' (३-१) इत्युक्तम् ।

(பொ-ள்) மாயாபிரமாதாவின் சொரூபம் சித்தமே என்று கூறுகிறது பின்வரும் சூத்திரம்.

[சூ. 6] 'மாயாபிரமாதா அதுவே (சித்தமே)'.

உடலும் உயிரும் கூடிய நிலையில் சித்தமே பிரதானம்; சூன்ய நிலையிலும் சித்த சம்ஸ்காரங்கள் உள்ளன; அல்லாவிடில் (சூன்ய நிலையிலிருந்து) விழித்துக்கொண்டவனுக்கு மீண்டும் தன் கடமைகளில் ஈடுபடுவது இயலாமற் போய்விடும். ஆகவே மாயாபிரமாதா

சித்தமயமானவனே. இக்கருத்தைக்கொண்டுதான் 'சிவசூத்திரத்தில்' மெய்ப்பொருளின் தன்மையை எடுத்துக்கூறும்போது 'சைதன்யம் ஆத்மா (1-1) என்று முதலில் கூறி, பின்னர் மாயாபிரமாதாவின் இலக்கணம் கூறுமிடத்து 'சித்தம் ஆத்மா' என்று கூறப்பட்டுள்ளது.

(வி-ம்) 'மாயாபிரமாதா' எனப்படுவோர் அசுத்தாத்வாவில் அறிவோர்களாக உள்ள பிரளயாகலரும் சகலரும் ஆவர்.

'சிவசூத்திரம்' பற்றி முன்னுரையில் காண்க.

अस्यैव सम्यक् स्वरूपज्ञानात् यतो मुक्तिः, असंयक् तु संसारः ततः तिलशः एतत्स्वरूपं निर्भङ्क्तुमाह ।

स चैको द्विरूपस्त्रिमयश्चतुरात्मासप्तपञ्चकस्वभावः ॥ ७ ॥

निर्णीतदृशा चिदात्मा शिवभट्टारक एव 'एक' आत्मा, न तु अन्यः कश्चित्; प्रकाशस्य देशकालादिभिः भेदायोगात्; जडस्य तु ग्राहकत्वानुपपत्तेः । प्रकाश एव यतः स्वातन्त्र्यात् गृहीतप्राणादिसंकोचः सङ्कुचितार्थग्राहकतामश्नुते, ततः असौ प्रकाशरूपत्वसंकोचावभासवत्त्वाभ्यां 'द्विरूपः' । आणवमायीयकार्ममलावृतत्वात् 'त्रिमयः' । शून्य - प्राण - पुर्यष्टकशरीरस्वभावत्वात् 'चतुरात्मा' 'सप्तपञ्चकानि' शिवादि पृथिव्यन्तानि 'पञ्चत्रिंशत्तत्त्वानि तत्स्वभावः' । तथा शिवादिसकलान्त - प्रमातृसप्तकस्वरूपः; चिदानन्देच्छाज्ञानक्रियाशक्तिरूपत्वेऽपि अख्यातिवशात् कला-विद्या-राग-काल-नियति कञ्चुकवलितत्वात् पञ्चकस्वरूपः । एवं च शिवैकरूपत्वेन, पञ्चत्रिंशत्तत्त्वमयत्वेन, प्रमातृसप्तकस्वभावत्वेन, चिदादिशक्तिपञ्चकात्मकत्वेन च अयं प्रत्यभिज्ञायमानो मुक्तिदः, अन्यथा तु संसारहेतुः ॥

(பொ-ள்) சைதன்ய சொரூப ஞானம் சரிவர ஏற்பட்டால் முத்தி, இல்லையேல் பிறப்பிறப்பு என்றமையால், சைதன்ய சொரூபத்தைப் பகுதி பகுதியாக அறிதற்பொருட்டு எழுந்தது அடுத்த சூத்திரம்.

[சூ.7] அவன் ஒருவனே யாயினும் ஈருருவாயும், மும்மையாயும், நால் வகையாயும், முப்பத்தைந்து தத்துவங்களாயும் இருக்கின்றான்.

முன்பே தெளிவுறுத்தியபடி சைதன்ய சொரூபியாகிற சிவ பட்டாரகன் ஒருவனே பரமாத்மா, வேறொன்று இல்லை. ஏனெனில் பிரகாசப் (அறிவொளி) பொருள், இடம், காலம் முதலானவற்றால்

பகுக்கப்படவியலாதது. சடப்பொருளுக்கு அறியும் ஆற்றல் இல்லை (அது அறியப்படுபொருளே). 'பிரகாசமாகிற' அப்பொருள் முழு சுதந்திரம் பெற்றுள்ளமையால், பிராணன் முதலானவையாகத் தன்னையே குறுக்கிக்கொண்டு ஒரெல்லைக்குட்பட்ட பொருள்களை அறிகின்ற நிலையை உடையோனாக ஆகிறது. ஆகவே 'பிரகாசம்' 'குறுக்கத் (சங்கோசம்) தோற்றம்' என்ற ஈருருவங்களை உடையதா கிறது. ஆணவம், மாயேயம் (மாயைத்தொடர்புடையது) கருமமலம் என்ற மும்மலங்களால் சூழப்பட்ட நிலையில் 'மும்மை நிலைமை' எய்துகிறது. சூன்யம், பிராணன், புரியட்டகம், உடல் என்ற நான்காகவும் தோற்றமளிக்கிறது. சிவன் முதல் பூமி ஈறாக முப்பத்தைந்து தத்துவங்களே அவனது சுவபாவம். சிவன் முதல் சகலர் ஈறாக ஏழு பிரமாதாக்களும் அவன் சொரூபமே. சித், ஆனந்தம், இச்சை, ஞானம், கிரியை ஆகிய சக்திகளே உருவான வனாயினும், 'அக்யாதியின்' காரணமாக அவையே கலை, வித்தை, ராகம், காலம், நியதி என்ற ஐந்து கஞ்சுகங்களால் (போர்வை) மூடப்பட்டு ஐவகை சொரூபத்தோடும் கூடியவனாகிறான். இது காறும் கூறியவாறு அத் தனிமுதல்வனாய சிவன் முப்பத்தைந்து தத்துவங்களாகவும், ஏழு பிரமாதாக்களாகவும், 'சித்' முதலாய ஐந்து சக்திகளையுடையவனாகவும் இருக்கிறான் என்பது மீண்டும் அறியப்படுகிறபோது அவன் முத்தியை அருளுகிறான். அல்லா விடில் பிறப்பிறப்பிற்கு ஏதுவாகிறது.

(வி-ம்) 'மலம்' என்பது மாசு, அழுக்கு, களிம்பு என்றெல்லாம் கூறப்படும். இது ஆணவம், மாயை, கருமம் என்று மூவகைப்படும். இவை சைதன்யத்தின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துவன ஆகையால் 'கட்டு' (பந்தம்) எனப்படும். ஆணவம் மூலமலம்; உயிருக்கு அணுவாம் தன்மையை (சிறுமையை) உண்டாக்குவது பற்றி அப்பெயர் கொண்டது. உயிரால் இக் கட்டை எதுவும் செய்ய இயலாது. இத்தலையால் உயிர் 'தான் சிவன்' என்ற உணர்வை இழந்து விடுகிறது. மாயையின் பொருள்களாகிற உடல், கரணம் முதலியவை பேத ஞானத்தைத் தோற்றுவிப்பன; கருமமலம் என்பது உயிர்கள் பல பிறவிகளில் செய்யும் வினைகளால் விளையும் பயன். உயிர்கள் அடையும் இன்பதுன்பங்களுக்கு இது காரணம்.

'புரியட்டகம்' என்பது ஐந்து தன்மாத்திரைகள், மனம், புத்தி, அகங் காரம் ஆகியவை.

एवं च—

तद्भूमिकाः सर्वदर्शनस्थितयः ॥ ८ ॥

सर्वेषां चार्वाकादिदर्शनानां 'स्थितयः'— सिद्धान्ताः 'तस्य' एतस्य आत्मनो नटस्येव स्वेच्छावगृहीताः कृत्रिमा भूमिकाः। तथा च 'चैतन्यविशिष्टं शरीरमात्मा' इति चार्वाकाः।

नैयायिकादयः ज्ञानादिगुणगणाश्रयं बुद्धितत्त्वप्रायमेव आत्मानं संसृतौ मन्यन्ते, अपवर्गे तु तदुच्छेदे शून्यप्रायम्। अहंप्रतीतिप्रत्येयः सुखदुःखाद्युपधाभिः तिरस्कृतः आत्मा इति मन्वाना मीमांसका अपि बुद्धावेव निविष्टाः। ज्ञानसंतान एव तत्त्वं इति सौगताः बुद्धिवृत्तिषु एव पर्यवसिताः। प्राण एव आत्मा इति केचित् श्रुत्यन्तविदः। असदेव इदमासीत् इति अभावब्रह्मवादिनः शून्यभुवमवगाह्य स्थिताः। माध्यामिका अपि एवमेव। परा प्रकृतिः भगवान् वासुदेवः तद्विस्फुलिङ्गप्रायाः एव जीवाः इति पाञ्चरात्राः परस्या प्रकृतेः परिणामाभ्युपगमात् अव्यक्ते एव अभिनिविष्टाः। सांख्यादयस्तु विज्ञानाकलप्रायां भूमिं अवलम्बन्ते। सदेव इदमग्र आसीत् इति ईश्वरतत्त्वपदमाश्रिता अपरे श्रुत्यन्तविदः। शब्दब्रह्ममय पश्यन्तीरूपं आत्मतत्त्वम् इति वैयाकरणाः श्रीसदाशिवपदमध्यासिताः। एवमन्यदपि अनुमन्तव्यम्। एतच्च आगमेषु—

'बुद्धितत्त्वे स्थिता बौद्धा गुणेष्वेवार्हताः स्थिताः। स्थिता वेदविदः पुंसि अव्यक्ते पाञ्चरात्रिकाः॥' इत्यादिना निरूपितम्। विश्वोत्तीर्णं आत्मतत्त्वम् इति तान्त्रिकाः। विश्वमयम् इति कुलाद्याम्नायनिविष्टाः। विश्वोत्तीर्णं विश्वमयं च इति त्रिकादिदर्शनविदः।

(பொ-ள்) ஆதலின்,

[சூ.8] எல்லா தரிசனங்களின் (தத்துவ நெறிகளின்) நிலைகளும் அச்சைதன்யம் ஏற்று நடிக்கும் பாத்திரங்களே.

சார்வாகம் முதலான எல்லா தத்துவநெறிகளின் சித்தாந்தங்களும் சைதன்யமாகிற நடிகன் தன்னிச்சையாக ஏற்றுக்கொண்டு நடிக்கும் செயற்கைப் பாத்திரங்கள் போல்வன.

சார்வாகர்கள் சைதன்யத்தோடு (அறிவோடு) கூடிய உடல் ஆத்மா என்கின்றனர். நையாயிகர்களும் ஆத்மா, ஞானம் முதலானவற்றின் ஆசிரயமாகவும், ஏறத்தாழ புத்திதத்துவமாகவே இச் சம்சாரத்தில் இருப்பதாகவும், அது (புத்தி) நீங்கியவிடத்து ஏற்படும் முத்திநிலையில் ஏறத்தாழ சூன்ய நிலையை அடைந்து விடுவதாகவும் கருதுகின்றனர். மீமாம்சகர்களும், இன்ப துன்பங்களாகிற 'உபாதிகள்' நீங்கப்பெற்ற நிலையில் 'நான்' என்ற உணர்வில் அறியப்படுபொருளாய் இருப்பதே ஆத்மா என்று சொல்லும்போது அவர்களும் 'புத்தி' தத்துவத்தில் நின்று விடுகிறார்கள். 'ஞானத் தொடரே' ஆத்மா என்ற பௌத்தர்களும் புத்தியின் செயல்களுக்கப் பாற் செல்லவில்லை. சில வேதாந்திகள் பிராணனே ஆத்மா என்றனர். முதலில் இன்மையே (அசத்) இருந்தது என்ற கொள்கையுடைய அபாவ பிரம்மவாதிகள் (சில வைதிகர்கள்) சூன்ய நிலையையே மேற்கொண்டவர்களானார்கள். மாத்யமிகர்களும் (பௌத்தத்தில் ஒரு பிரிவினர்) அதே கொள்கையுடையவர்கள். பாஞ்சராத்ரர்கள் பகவான் வாசுதேவரே மேலான காரணர், சீவாத்மாக்கள் அச்சோதியினின்றும் வெளிப்போந்த தீப்பொறிகள் போன்றவர்கள் என்ற கொள்கையினர். பரமகாரணரிடமிருந்து சீவர்கள் பரிணமித்தார்கள் என்றமையால் அவர்கள் அவ்யக்தமே மூல காரணம் என்று கொண்டவர்கள். சாங்கியரும் மற்றும் சிலரும் ஏறத்தாழ விஞ்ஞானகலரின் நிலையையே முடிவான நிலை எனக் கருதினர். மற்றும் சில வேதாந்திகள் 'உள்பொருளே (சத்) முதலில் இருந்தது' என்பதை (வேதவாக்கியத்தை) ஏற்றுக்கொண்டு ஈசுவர தத்துவமே மேலான நிலை என்று கருதினர். 'பச்யந்தீ' என்ற வாக்கு ரூபமான சப்தபிரம்மமயமானது ஆத்மதத்துவம் என்று கொண்ட வையாகரணர்கள் சதாசிவநிலையில் பெருநிலையைக் கண்டார்கள். இவை போன்றே பிற மதங்களும் (நமது மதத்தில் மேல்நிலையாகக் கருதப்படுகின்ற சிவத்திற்கு கீழ்ப் படிநிலைகளில் இருப்பவையாக) ஊகித்துக்கொள்ளலாம். இது பின்வருமாறு ஆகமங்களில் கூறப்பட்டுள்ளது.

'புத்தி தத்துவத்தில் நின்று விட்டார்கள் பௌத்தர்கள்; ஆருகதர்கள் குணங்களில் நின்று விட்டார்கள்; வேதாந்திகளுள் சிலர் புருஷதத்துவத்தில் நின்று விட்டார்கள்; பாஞ்சராத்திரிகர்கள் அவ்யக்தத்தில் நின்று விட்டார்கள்.'

தாந்திரிகர் 'பிரபஞ்சத்தைக் கடந்து நிற்பது ஆத்மதத்துவம்' என்றனர். சாக்தர்கள், 'ஆத்மதத்துவம் பிரபஞ்சத்தைக் கடந்தும் வியாபித்தும் இருப்பது' என்றனர்.

(வி-ம்) 'உபாதி' என்பது ஒரு பொருளைச் சார்ந்திருக்கும் வரை அதன் தன்மையை மாற்றக்கூடியது.

'பிரகிருதி' என்ற சொல் 'காரணம்' என்ற பொருளில் ஆளப் பட்டுள்ளது. சாங்கியப் 'பிரகிருதி' வேறு.

'பாஞ்சராத்ரம்' என்ற சொல் 'பரமதத்துவம், முத்தி, போகம், யோகம், சம்சாரம் ஆகிய ஐந்தைப் பற்றிய ஞானத்தைத் (ராத்ரம்) தருவது என்கிறது நாரத பாஞ்சராத்ரம் (1.44). [பாஞ்சராத்திரத்தில் 'அவ் யக்தம்' மேலான நிலை என்று கருதுவதாக ஆசிரியர் கூறியிருப்பது பொருத்தமாக இல்லை.]

'த்ரிக'க் கொள்கையின்படி பௌதிகப் பிரபஞ்சமும் சப்த பிரபஞ்சமும் சூக்குமநிலையில் பரமசிவனிடத்தில் உள்ளன. இது சப்தபிரம்மவாதிகள் கூறும் 'பரா' வாக்கை ஒக்கும். ஆனால் க்ஷேமராஜர் சப்தபிரம்மவாதிகள் கருதும் மேலானநிலை 'பச்யந்தீ' (பரா வாக்கிற்கு அடுத்த கீழ்நிலை) நிலை என்று கூறுவது சிந்திக்கத் தக்கது.

'தந்த்ரம்' என்ற சொல் 'தந்' (விரித்தல்) என்பதனடியாகத் தோன்றியது. தத்துவங்களையோ அல்லது ஒரு பொருளையோ விரித்தல் என்று பொருள் கொள்ளலாம்.

**एवं एकस्यैव** चिदात्मनो भगवतः स्वातन्त्र्यावभासिताः सर्वा इमा भूमिकाः स्वातन्त्र्यप्रच्छादनोन्मीलनतारतम्यभेदिताः । अत एक एव एतावद्व्याप्तिक आत्मा । मितदृष्टयस्तु अंशांशिकासु तदिच्छयैव अभिमानं ग्राहिताः येन देहादिषु भूमिषु पूर्वपूर्वप्रमातृव्याप्तिसारताप्रथायामपि उक्तरूपां महाव्याप्तिं परशक्तिपातं विना न लभन्ते । यथोक्तम्—

'वैष्णवाद्यास्तु ये केचिद्विद्यारागेण रञ्जिताः ।
न विदन्ति परं देवं सर्वज्ञं ज्ञानशालिनम् ॥' इति । तथा

'भ्रमयत्येव तान्माया ह्यमोक्षे मोक्षलिप्सया ।' इति ।

'त आत्मोपासकाः शैवं न गच्छन्ति परं पदम् ॥' इति च ।

अपि च सर्वेषां दर्शनानां समस्तानां नीलसुखादिज्ञानानां याः 'स्थितयः'—अन्तर्मुखरूपा विश्रान्तयः ताः 'तद्भूमिकाः'—चिदानन्दघनस्वात्मस्वरूपाभि-

व्यक्त्युपायाः । तथा हि यदा बहिर्मुखं रूपं स्वरूपे विश्राम्यति, तदा तदा बाह्यवस्तूपसंहारः; अन्तः प्रशान्तपदावस्थितिः; तत्तदुदेष्यत्संतत्यासूत्रणम्;—इति सृष्टिस्थितिसंहारमेलनरूपा इयं तुरीया संविद्भट्टारिका तत्तत् सृष्ट्यादिभेदान् उद्वमन्ती संहरन्ती च, सदा पूर्णा च कृशा च, उभयरूपा च, अनुभयात्मा च, अक्रममेव स्फुरन्ती स्थिता । उक्तं च श्रीप्रत्यभिज्ञाटीकायाम्—

'तावदर्थावलेहेन उत्तिष्ठति, पूर्णा च भवति' इति ।

एषा च भट्टारिका क्रमात्क्रमम् अधिकमनुशील्यमाना स्वात्मसात्करोत्येव भक्तजनम् ।

சைதன்யரூபனுன பகவான் ஒருவனே. அவன் தோன்றும் பாத்திரங்கள் அவனுடைய சுயேச்சையினுலே தோற்றுவிக்கப் பட்டவை. அவற்றிற்கிடையே உள்ள வேறுபாடுகளும் ஏற்றத் தாழ்வுகளும் அவன் எந்த அளவிற்கு சுயேச்சையாக அவற்றை மறைக்கவோ வெளிப்படுத்தவோ விரும்புகிருன் என்பதைப் பொருத்தது. ஆகவே ஆத்மா ஒன்றென்பதும் அது (த்ரிகமதத்தின் படி) இந்த அளவிற்கு வியாபித்திருக்கிறது என்பதும் அறியத் தக்கன. ஓர் வரையறைக்குபட்ட அறிவினை உடையரோவெனில், அப்பரமனின் இச்சைக்கேற்பவே ஒவ்வொரு அம்சத்தோடு தம்மை இணைத்துக்கொள்கிருர்கள். இதனுல் பரமசிவனுடைய 'சக்திபாதம்' ஏற்படாதவரை மேலே குறிப்பிட்டவாறு (சார்வாகம் முதலான மதத்தைச் சார்ந்தோரால்) தேகம் முதலான பாத்திரங்களில் அந்தந்த பிரமாதாக்களால் சிவனது வியாபகத்தன்மை விரிவடைதல் அறியப் படுவதில்லை. அது கீழ்க்கண்ட பகுதியில் கூறப்பட்டுள்ளது.

'வித்யாதத்துவத்தால் ஆக்கிரமிக்கப்பட்ட உள்ளத்தினரான வைணவர்கள் முதலானேர் ஞானம் நிரம்பப்பெற்றவனும் எல்லாம் அறிந்தவனுமான பரதேவனை அறிகின்றிலர்.'

அதே போன்று பின்வரும் பகுதியும் (சுவச்சந்த தந்திரம் 10ஆம் படலம் 1141 ஆம் செய்யுள்) கூறுகிறது.

'மாயை, முத்தியளிக்க இயலாத நெறிகளில் முத்தியைத் தேடும் விருப்பத்தை ஏற்படுத்திப் பிறமதங்களைப் பின்பற்றுவோரைச் சுழற்றுகிறது'.

'(உடல், புத்தி முதலானவற்றை) ஆத்மா என்று வழிபடும் பிற மதத்தினர் மேலான சிவபதத்தை அடையமாட்டார்கள்'—(நேத்ர தந்திரம், 8-ஆம் படலம், 30-ஆம் செய்யுள்).

(இவ்வெட்டாம் சூத்திரம் வேறுவகையிலும் பொருள் கொள்ளத் தக்கது. 'தரிசனம்' என்பது 'மதம்' என்றில்லாமல் 'அறிவு' என்றும், 'ஸ்திதி' என்பது 'நிலை' என்றில்லாமல் 'உள்முகமாக நின்றுவிடுதல்' என்றும், 'பூமிகை' என்பது 'பாத்திரம்' என்றில்லாமல் 'சாதனம்' என்றும் கொண்டு இப்போது விளக்கப்படுகிறது).

'இது நீலம், இது இன்பம் என்பன போன்ற உலகியல் அறிவு (தரிசனம்) உள்முகமாக ஓரெல்லையில் நின்றுவிடுதல் (ஸ்திதி), சிதானந்த பூர்த்தியை சொரூபமாகக் கொண்ட சிவனது (தத்) அபிவ்யக்திக்குச் சாதனமாக (பூமிகை) அமைகிறது'.

இதனை விளக்குவோம். எவ்வெப்போது (சைதன்யத்தின்) புறத் தோற்றம் சிவசொரூபத்தில் ஒடுங்குகிறதோ அவ்வப்போது புறப் பொருள்களின் ஒடுக்கம் (சம்ஹாரம்) ஏற்படுகிறது. அப்போது உள்ளம் சாந்தநிலையில் இருத்தப்படுகிறது; பின்னர் புதிதாகப் பல வித அனுபவங்கள் தொடர்ந்து வருகின்றன, நூலில் கோர்க்கப்பட்ட மாலைபோல. இவ்வாறு நான்காவது நிலையாகிற (துரீய) சம்வித் பட்டாரிகை அல்லது சைதன்யசக்தி, சிருட்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்னும் முத்தொழில்களைத் தொடர்ந்து (உடன்கூட்டிச்) செய்த வண்ணமிருக்கின்றது. ஒரு சமயம் பல்வேறு பொருள்களைத் தோற்றுவித்தும் ஒடுக்கியும் செயல்புரிகிறது. அச் சக்தி என்றும் நிறைந்தும், குறைந்தும், நிறைகுறை உடைத்தாயும், இரண்டும் அற்றதாயும் எவ்வித கிரமமுமின்றிச் செயற்படுகிறது. பிரத்ய பிஜ்ஞாடீகையில் கீழ்க்கண்டவாறு சொல்லப்படுகிறது—

'பொருள்களை சம்ஹரிக்கும்போது (பட்டாரிகை) எழுச்சியடை கிருள், நிறைவுடையவளாகிருள்'.

எவ்வளவுக்கெவ்வளவு இவள் பக்தர்களால் அணுகப்படுகின் ருளோ அந்த அளவுக்குப் படிப்படியாக அவர்களை அவள் தன்னி டத்தே ஐக்கியப்படுத்திக்கொள்கிருள்.

(வி-ம்) 'குலம்' எனபது சக்தியைக் குறிக்கும். சங்கரனுடைய ஐந்து முகங்களிலிருந்து ஐந்து 'ஆம்நாயங்கள்' தோன்றின வென்றும் ஊர்த்வ முகத்தினின்றும் தோன்றியது ஊர்த்வாம்நாயம் என்றும் குலார்ணவ தந்த்ரம் கூறுகிறது. 'நரன், சக்தி, சிவம்' என்ற முப்பொருளும் 'த்ரிகம்' என்றுசொல்லப்படுவது. வேறுவகையாகவும் பொருள் கொள்வதுண்டு. முன்னுரையில் காண்க.

4

'சிவனது வியாபகத்தன்மை விரிவடைதல்' தேகப்பிரமாதா, சூன்யப்பிரமாதா, விஞ்ஞானகேவலி, மந்திரர், மந்திரேசுவரர், மந்திர மகேசுவரர் ஆகியோரால் அடுத்தடுத்து மேன்மேலும் விரிவடைந்த நிலையில் உணரப்படும் சைதன்ய விகாசத்தைக் குறிக்கும் பரப்பிரமாதா பரமசிவன்.

'துரீயம்' என்பது உலகியல் நிலையில் விழிப்பு, சொப்பனம், சுழுத்தி என்ற மூன்று நிலைகளையும் கடந்த நான்காவது அறிநிலை. பாரமார்த்திக நிலையில் 'துரீயம்' என்பது சிருட்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்ற மூன்றனுள்ளும் ஊடுருவி நிற்பது. துரீய நிலையில் மனிதனுக்கு பேத உணர்வு எழாது.

यदि एवंभूतस्य आत्मनो विभूतिः, तत् कथम् अयं मलावृतः अणुः कलादिवलितः संसारी अभिधीयते ? इत्याह—

चिद्वत्तच्छक्तिसङ्कोचात् मलावृतः संसारी ॥ ९ ॥

यदा 'चिदात्मा' परमेश्वरः स्वस्वातन्त्र्यात् अभेदव्याप्तिं निमज्ज्य भेद-व्याप्तिं अवलम्बते, तदा 'तदीया इच्छादिशक्तयः' असङ्कुचिता अपि 'सङ्कोच-वत्यो' भान्ति ; तदानीमेव च अयं मलावृतः संसारी भवति। तथा च अप्रति-हतस्वातन्त्र्यरूपा इच्छाशक्तिः सङ्कुचिता सती अपूर्णमन्यतारूपं आणवं मलम्। ज्ञानशक्तिः क्रमेण सङ्कोचात् भेदे सर्वज्ञत्वस्य किञ्चिज्ज्ञत्वाप्तेः अन्तःकरण - बुद्धी-न्द्रियतापत्तिपूर्वं अत्यन्तं सङ्कोचग्रहणेन भिन्नवेद्यप्रथारूपं मायीयं मलम्। क्रियाशक्तिः क्रमेण भेदे सर्वकर्तृत्वस्य किञ्चित्कर्तृत्वाप्तेः कर्मेन्द्रियरूपसङ्कोचग्रहणपूर्वं अत्यन्तं परिमिततां प्राप्ता शुभाशुभानुष्ठानमयं कार्मं मलम्। तथा सर्वकर्तृत्व-सर्वज्ञत्व-पूर्णत्व-नित्यत्व-व्यापकत्वशक्तयः सङ्कोचं गृह्णाना यथाक्रमं कला-विद्या-राग-काल-नियति-रूपतया भान्ति। तथाविधश्च अयं शक्तिदरिद्रः संसारी उच्यते ; स्वशक्तिविकासे तु शिव एव ॥

(பொ-ள்) ஆத்மாவிற்கு இவ்வளவு பெருமை இருக்குமானால், எப்படி ஆத்மா மலங்களால் சூழப்பட்ட அணு (சீவன்) என்றும், கலை முதலான (தத்துவங்களால்) போர்த்தப்பட்டு சம்சாரி என்றும் அழைக்கப்படுகிறது? இதற்கு பதிலாக அமைந்தது அடுத்த சூத்திரம்.

[சூ. 9] சைதன்யத்தின் சக்தி குறுகும்போது அச்சைதன்யமே மலங்களால் சூழப்பெற்ற சம்சாரியாகிறது.

சைதன்ய சொரூபனுன பரமேசுவரன் தன் சுதந்திரமான இச்சையால் இரண்டற வியாபித்திருக்கும் தன்மையை மறைத்துக் கொண்டு எப்போது எப்பொருளிலும் வேறுபடும் தன்மையை மேற் கொள்கிறதோ, அப்போது அச்சைதன்யத்தின் இச்சை முதலான சக்திகள் உண்மையிலேயே குன்ருவிடினும் குன்றியவைபோல் தோன்றுகின்றன. அப்போதுதான் அச்சைதன்யம் மலங்களால் சூழப்பட்ட சம்சாரி (பிறந்திறந்துழலும் சீவனுக) ஆகிறது. தடையின்றிச் சுதந்திரமாக இயங்கும் இச்சாசக்தி குறுகிய நிலையில் குறையுடையதாயிருப்பதாக எண்ணச்செய்யும் ஆணவமாகிற மலம். பேதம் நிறைந்த நிலையில் ஞானசக்தி சிறிது சிறிதாகக் குறுகவும் பேரறிவுடைமை சிற்றறிவுடைமையாக மாறத் தொடங்குகிறது. அப்போது அந்தக்கரணம், புத்தி, இந்திரியங்கள் முதலியவை ஏற்றுக் கொள்ளப்பட்டு இச்சக்தி மிகவும் குறுகிவிடுகிறது; வேறுபாட்டுணர்வு ஓங்கி நிற்கிறது; இதற்குக் காரணம் மாயீய (மாயையைச் சார்ந்த பொருள்களின் பிடிப்பாகிற) மலம். பேதம் நிறைந்த உலகில் சிறிதுசிறிதாக கிரியா சக்தியும் குறையவே, எல்லாவற்றையும் செய்யும் வல்லமை மாறி சிலவற்றையே செய்யும் நிலை ஏற்படுகிறது. கர்மேந்திரியங்கள் என்ற உருவில் கிரியாசக்தி மிகக் குறுகி நல்வினை தீவினையாகிற செயலைச் செய்வதன் மூலம் கருமமலம் ஏற்படுகிறது. இவ்வாறு சர்வகர்த்துருத்வம், சர்வக்ஞத்வம், பூர்ணத்வம், நித்யத்வம், வியாபகத்வம் ஆகிய சக்திகள் குறுகிய நிலையில் முறையே கலை, வித்தை, ராகம், காலம், நியதி என்ற தத்துவங்களாகக் காணப்படுகின்றன. இந்நிலையிலுள்ள சீவனே சக்தியற்றவனுய் சம்சாரி என்று சொல்லப்படுகிருன். இச் சக்திகள் முழுமையாகப் பிரசாசிக்கும்போது சிவன் எனப்படுகிருன்.

(வி-ம்) ஸம்+ஸ்ரு (இயங்கிக்கொண்டே இருத்தல்) என்பதனடியாகப் பிறந்த 'ஸம்ஸாரம்' என்ற சொல், உலகில் உயிர்கள் ஊழி தோறும் பிறந்து, வளர்ந்து, தேய்ந்து, இறந்து மீண்டும் பிறந்து இயங்கிக்கொண்டே இருப்பதைக் குறிக்கும். இதற்குக் காரணம் மும்மலங்கள்.

ननु संसार्यवस्थायां अस्य किंचित् शिवतोचितम् अभिज्ञानमस्ति येन शिव एव तथावस्थितः ? इत्युद्घोष्यते । 'अस्ति' इत्याह—

तथापि तद्वत् पञ्च कृत्यानि करोति ॥ १० ॥

इह ईश्वराद्वयदर्शनस्य ब्रह्मवादिभ्यः अयमेव विशेषः, यत्

सृष्टिसंहारकर्तारं विलयस्थितिकारणम् ।
अनुग्रहकरं देवं प्रणतार्तिविनाशनम् ॥

इति श्रीमत्स्वच्छन्दादिशासनोक्तनीत्या सदा पञ्चविधकृत्यकारित्वं चिदात्मनो भगवतः। यथा च भगवान् शुद्धेतराध्वस्फारणक्रमेण स्वरूपविकासरूपाणि सृष्ट्यादीनि करोति, 'तथा' सङ्कुचितचिच्छक्तितया संसारभूमिकायामपि 'पञ्चकृत्यानि' विधत्ते । तथा हि—

'तदेवं व्यवहारेऽपि प्रभुर्देहादिमाविशन् ।
नान्तमेवान्तरर्थौघमिच्छया भासयेद् बहिः ॥'

इति प्रत्यभिज्ञाकारिकोक्तार्थदृष्ट्या देहप्राणादिपदम् आविशन् चिद्रूपो महेश्वरो बहिर्मुखीभावावसरे नीलादिकमर्थं नियतदेशकालादितया यदा आभासयति, तदा नियतदेशकालाद्याभासांशे अस्य सृष्टता ; अन्यदेशकालाद्याभासांशे अस्य संहर्तृता ; नीलाद्याभासांशे स्थापकता ; भेदेन आभासांशे विलयकारिता ; प्रकाशैक्येन प्रकाशने अनुग्रहीतृता । यथा च सदा पञ्चविधकृत्यकारित्वं भगवतः, तथा मया वितत्य स्पन्दसन्दोहे निर्णीतम् ।

एवमिदं पञ्चविधकृत्यकारित्वं आत्मीयं सदा दृढप्रतिपत्त्या परिशील्यमानं माहेश्वर्यं उन्मीलयत्येव भक्तिभाजाम् । अत एव ये सदा एतत् परिशीलयन्ति, ते स्वरूपविकासमयं विश्वं जानाना जीवन्मुक्ता इत्याम्नाताः। ये तु न तथा, ते सर्वतो विभिन्नं मेयजातं पश्यन्तो बद्धात्मानः ॥

(பொ-ள்) சம்சாரநிலையில் இருக்கும் சீவனும் சிவனே என்பதைக் குறிக்க ஓரளவு சிவத்வத்தைக் காட்டும் ஏற்றதொரு அடையாளம் இருக்கிறதா என்று கேட்டால், உண்டு என்று அடுத்து கூறப் படுகிறது.

[சூ. 10] 'அந்த (சம்சார) நிலையிலும் அவனைப் (சிவனை) போலவே (சீவனும்) ஐந்தொழில்களைச் செய்கிறான்'.

ஈசுவராத்வய தரிசனத்திற்கும் பிரம்மவாதி தரிசனத்திற்கு மிடையே உள்ள வேறுபாடு இதுதான்—

'பணிவாரின் துயரத்தைப் போக்குகின்றவனுன (சிவன்) சிருஷ்டி, சம்ஹாரம், விலயம், ஸ்திதி, அநுக்கிரகம் ஆகியவற்றைச் செய்யும் தேவராவார்'.

இப்படிக் கூறுகின்றன சுவச்சந்தம் முதலான ஆகமங்கள். இதனுல் சைதன்ய சொரூபனுன பகவான் ஐந்தொழில் புரிபவன் என்பது பெறப்படுகிறது. எவ்வாறு பகவான் அசுத்தாத்துவாவில் சொரூப விகாசத்தின் மூலம் உலக வெளிப்பாட்டை சிருஷ்டி முதலான செயல்களால் செய்கின்ருனே, அவ்வாறே குறுக்கப்பட்ட சித்சக்தியால் சம்சார நிலேயிலும் பஞ்ச கிருத்யங்களேச் செய்து வருகிருன். இதைக்கூறும் பகுதி—

இது இவ்வாருக, உலகியல் நிலேயிலும் பிரபுவான (சிவன்) உடல் முதலானவற்றில் புகுந்துகொண்டு தனது இச்சை ஒன்றினுலேயே, பலவகையான பொருள் தொகுதிகளும் தன்னுள்ளே பிரகாசித்துக்கொண்டிருப்பினும், புறத்தே தோன்றும்படியாகச் செய்கின்ருன்—[ஈசுவர பிரத்யபிஜ்ஞை, 6-வது ஆஹ்நிகம், 7-வது காரிகை].

பிரத்யபிஜ்ஞாகாரிகையில் கூறியவண்ணம் இறைவன் புரியும் ஐந்தொழில்களாவன: சித்ரூபமான மகேசுவரன் உடல், பிராணன் முதலானவற்றுள் பொருந்தி நீலம் முதலானவையாக வெளிப்பாடு அடையும்போது, குறிப்பிட்ட தேசம், காலம் ஆகிய வரையறைக்குள் தோன்றுவதால் அது, 'சிருஷ்டி' என்று சொல்லப்படுகிறது; அவை பிறிதொரு தேசம், காலம் ஆகிய வரையறைக்குள் தோன்றும்போது 'சம்ஹாரம்' (ஒடுக்கம்) எனப்படுகிறது; நீலம் முதலியவையாகக் காட்சியளிக்கும்போது 'ஸ்திதி' என்று கூறப்படுகிறது; அவை வேறுபட்ட உருவில் காட்சியளிக்கும்போது 'விலய' காரியம் எனப்படுகிறது; சைதன்யப் பேரொளியோடு ஒன்றிப் பிரகாசிக்கும்போது 'அநுக்ரகத் (அருளல்) தொழில்' எனப்படுகிறது. இறைவன் எப்படி எப்போதும் ஐந்தொழில்களே நிகழ்த்திக்கொண்டே இருக்கிருன் என்பது என்னுல் (ஆசிரியரால்) ஸ்பந்த ஸந்தோஹத்தில் விரிவாக எடுத்துக்கூறப்பட்டுள்ளது.

இவ்வைந்தொழிற் செயன்முறையை தன்னகத்தே எப்போதும் நிகழ்வதை உறுதியாக ஆராய்ந்தறிகின்ற பக்தர்களுக்கு மகேசுவரனுடைய பெருமை தெற்றென விளங்கும். ஆதலின், எவர்கள் இதை இடைவிடாது ஆய்கின்றனரோ அவர்கள் சைதன்ய சொரூப

மலர்ச்சியே இப்பிரபஞ்சம் என்பதை அறிந்தவர்களாய் சீவன் முத்தர்கள் என்றழைக்கப்படுகின்றனர். எவர்கள் இங்ஙனம் ஆராய இயலாதவர்களாக பொருள்களனைத்தையும் முற்றும் வேறுபட்டன வாகக் காண்கின்றனரோ அவர்கள் கட்டுண்ட சீவர்களாவர்.

न च अयमेव प्रकारः पञ्चविधकृत्यकारित्वे, यावत् अन्योऽपि कश्चित् रहस्यरूपोऽस्ति — इत्याह

आभासन - रक्ति - विमर्शन - बीजावस्थापन - विलापनतस्तानि ॥ ११ ॥

'पञ्चविधकृत्यानि करोति' इति पूर्वतः संबध्यते । श्रीमन्महार्थदृष्ट्या दृगादिदेवी-प्रसरणक्रमेण यत् यत् आभाति, तत् तत् सृज्यते; तथा सृष्टे पदे तत्र यदा प्रशान्तनिमेषं कंचित् कालं रज्यति, तदा स्थितिदेव्या तत् स्थाप्यते; चमत्कारा-परपर्यायविमर्शनसमये संह्रियते । यथोक्तं श्रीरामेण —

समाधिवज्रेणाप्यन्यैरभेद्यो भेदभूधरः ।
परामृष्टश्च नष्टश्च त्वद्भक्तिबलशालिभिः ॥' इति ।

यदा तु संह्रियमाणमपि एतत् अन्तः विचित्राशङ्कादिसंस्कारं आधत्ते, तदा तत् पुनः उद्भविष्यत्संसारबीजभावमापन्नं विलयपदं अध्यारोपितम् । यदा पुनः तत् तथा अन्तः स्थापितं अन्यत वा अनुभूयमानमेव हठपाकक्रमेण अलंग्रासयुक्त्या चिदग्नि-साद्भावं आपद्यते, तदा पूर्णतापादनेन अनुगृह्यते एव । ईदृशं च पञ्चविधकृत्य-कारित्वं सर्वस्य सदा सन्निहितमपि सद्गुरूपदेशं विना न प्रकाशते इति सद्गुरु-सपर्यैव एतत्प्रथार्थं अनुसर्तव्या ॥

(பொ-ள்) மேலே கூறப்பட்ட ஒன்றே ஐந்தொழிற் செயல்முறை பற்றிய விளக்கமல்ல; மற்றுமொரு இரகசிய முறையுமுண்டு. அதாவது—

[சூ. 11] 'வெளிப்பாடு, சுவைத்தல், தன்னுணர்வு, விதையிடுதல், விலயம் ஆகியவை (ஐந்தொழில்கள்)'.

'இவ்வகையில் ஐந்தொழில்கள் செய்யப்படுகின்றன' என்பதை முன் சூத்திரத்துடன் இணைத்துக்கொள்க. மேலான லட்சிய நிலையில் நின்று நோக்கும்போது (அந்தந்த பொறிகளின் செயல் வழியே) கண் முதலான பொறிகளாகிற தேவியர் வெளிப்படும்போது

'தோற்றம்' எனும் தொழில் செய்யப்படுகிறது; (பொருள்கள் தோன்றியவிடத்து) திறந்த கண் மூடாமல் அக்கட்புலன் முதலான தேவியர் அப்பொருள்களில் தோய்ந்து சுவைத்துக்கொண்டிருக்கும் போது ஸ்திதி தேவியரால் 'ஸ்திதி' (நிலைபெறுத்தல்) எனும் தொழில் செய்யப்படுகிறது; சமத்காரம் என்று மற்றொரு பெயரால் வழங்கப்படுகின்ற விமர்சனகாலமே 'சம்ஹாரம்' எனப்படுவது. இதை ஸ்ரீராமர் சொல்லும்போது—

'மலைபோல் காணப்படும் பேதங்கள் (யோகநிலையாகிற) சமாதி எனும் வச்சிரத்தாலும் தகர்க்கமுடியாதவை; ஆயினும் ஆழ்ந்த பக்தி யுள்ளவர்களால் தம்மினின்றும் வேறுபாடற்றவையாக அவை கருதப்படும்போது அவை அழிந்தொழிகின்றன', என்று கூறுகிறார்.

எனினும் (வேறுபாடுகள் மறைதலாகிய) சம்ஹாரம் ஏற்படும் போது ஐயம் முதலான பல்வேறு சம்ஸ்காரங்கள் (அப்பொருள் வேறு பாடு காரணமாக) ஏற்படுமானால், அப்போது மீண்டும் தோற்றத் திற்குக் காரணமாகிற சம்சார விதை ஊன்றப்படுகிறது. அதுவே விலயம் (பரம்பொருள் தன்மை மறைப்பு) எனப்படுவதாகிறது. மாறாக அது (விதையாக இருக்கும் பிரபஞ்சம்) தன்னோடு ஒன்றிய தாக உணரப்பட்டு எஞ்சிய அக்காலக்தே அனுபவிக்கப்படுவதான ஒன்று, தொடர்ந்த முயற்சியாலோ அல்லது ஒரேயடியாகப் பொசுக்கு வதாலோ சைதன்யத்துடன் கூடி அதன் தன்மையை அடைந்து விட்டால் அப்போது முழுமை நிலைமை அடையப்பெற்று அநுக் கிரகம் எனப்படுகிறது. இத்தகைய பஞ்சகிருத்யமாகிற செயல் அனைவருக்கும் எப்போதும் இருந்துவந்தபோதிலும் சற்குருவின் உபதேசமின்றி பிரகாசிப்பதில்லை. ஆகவே சற்குருவிடம் பணிவிடை செய்தல் இதன்பொருட்டு மேற்கொள்ளத் தக்கதாகும்.

(வி-ம்) 'ஈசுவராத்வயம்' என்பது காச்மீர சைவத்தைக் குறிக்கும். 'சமத்காரம்' என்பது திடீரெனத் தோற்றுவிக்கப்படும் மகிழ்ச்சி.

यस्य पुनः सद्गुरूपदेशं विना एतत्परिज्ञानं नास्ति, तस्य अवच्छादितस्व-स्वरूपाभिः निजाभिः शक्तिभिः व्यामोहितत्वं भवति इत्याह ।

तदपरिज्ञाने स्वशक्तिभिर्व्यामोहितता संसारित्वम् ॥ १२ ॥

'तस्य' एतस्य सदा संभवतः पञ्चविधकृत्यकारित्वस्य 'अपरिज्ञाने' शक्तिपातहेतु-कस्वबलोन्मीलनाभावात् अप्रकाशने 'स्वाभिः शक्तिभिः व्यामोहितत्वं' विविध-

लौकिकशास्त्रीयशङ्काशङ्कुकीलितत्वं यत्, इदमेव 'संसारित्वम्'। तदुक्तं श्रीसर्ववीर-भट्टारके—

'अज्ञानाच्छङ्कते लोकस्ततः सृष्टिश्च संहृतिः' इति।

'मन्त्रा वर्णात्मकाः सर्वे सर्वे वर्णाः शिवात्मकाः' इति च।

तथा हि—चित्प्रकाशात् अव्यतिरिक्ता नित्योदितमहामन्त्ररूपा पूर्णाहं विमर्शमयी या इयं परा वाक्शक्तिः आदि-क्षान्त-रूपा-शेषशक्तिचक्रगर्भिणी, सा तावत् पश्यन्तीमध्यमादिक्रमेण ग्राहकभूमिकां भासयति। तत्र च पराRूपत्वेन स्वरूपं अप्रथयन्ती मायाप्रमातुः अस्फुटासाधारणार्थाविभासरूपां प्रतिक्षणं नवनवां विकल्पक्रियामुल्लासयति, शुद्धामपि च अविकल्पभूमिं तदाच्छादितामेव दर्शयति। तत्र च ब्राह्मयादिदेवताधिष्ठितककारादिविचित्रशक्तिभिः व्यामोहितो देहप्राणादिमेव परिमितम् अवशम् आत्मानम् मन्यते मूढजनः। ब्राह्मयादिदेव्यः पशुदशायां भेद-विषये सृष्टिस्थिती, अभेदविषये च संहारं प्रथयन्त्यः परिमितविकल्पपात्रतामेव संपादयन्ति। पतिदशायां तु भेदे संहारम्, अभेदे च सर्गस्थिती प्रकटयन्त्यः, क्रमात्क्रमं विकल्पनिर्ह्रासनेन श्रीमद्भैरवमुद्रानुप्रवेशमयीं महतीं अविकल्पभूमिमेव उन्मीलयन्ति।

'सर्वो ममायं विभव इत्येवं परिजानतः।
विश्वात्मनो विकल्पानां प्रसरेऽपि महेशता॥'

इत्यादिरूपां चिदानन्दावेशमग्नां शुद्धविकल्पशक्तिं उल्लासयन्ति। ततः उक्तनीत्या स्वशक्तिव्यामोहिततैव संसारित्वम्।

(பொ-ள்) சற்குருவின் உபதேசம் இல்லையேல் ஒருவனுக்கு (ஐந் தொழிற்புரிவோன் பற்றிய) முழு அறிவு ஏற்படுவதில்லை; தன்னுடைய சக்திகளால் மறைப்புண்ட சொரூபத்தை உடையவனாதலின் அவனுக்கு அறியாமை (வியாமோகம்) ஏற்படுகிறது. இதைக் கூறுகிறது அடுத்த சூத்திரம்.

[சூ. 12] அது (ஐந்தொழிற்புரிவோன்) பற்றிய முழு அறிவு பெறாத நிலையில் தனது சக்திகளால் மிகுதியும் அறியாமையில் அழுந்தும் போது அவன் சம்சாரி நிலையை அடைந்தவனாகிறான்.

சூத்திரத்தில் 'தத்' (அது) என்ற சொல் இடையறுது நிகழ்ந்து கொண்டிருக்கும் ஐந்தொழிலைப் புரிகின்றவனைப் பற்றிய நிலையைக் குறிக்கும். 'அபரிஞானம்' என்பது அறியாமை. அதைப் பிரகாசியா திருத்தல் என்றும் கூறலாம். இதற்குக் காரணம் சக்திநிபாதத்தால் ஏற்படும் 'தனது பலத்தின் தோற்றம்' நிகழாமையே யாகும். தனது சக்திகளால் அறியாமையில் உழலுதலே சம்சாரியின் நிலை. இந் நிலையில் உலகியற் கருத்துக்களாலும் சாத்திரங்களில் கூறப்படும் கருத்துக்களாலும் எழுகின்ற ஐயப்பாடுகளால் ஒருவன் முடக்கப் பட்டுவிடுகிறான். இது கீழ்க்கண்டவாறு சர்வவீரபட்டாரகத்தில் கூறப்பட்டுள்ளது.

'அறியாமையால், உலகம் ஐயத்தாலும் அச்சத்தாலும் பீடிக்கப் படுகிறது. இதன் விளைவாக தோற்றமும் ஒடுக்கமும் நிகழ்கின்றன'.

'எல்லா மந்திரங்களும் வர்ணங்களால் (ஒலிகளால்) ஆனவை; எல்லா வர்ணங்களும் (ஒலிகளும்) சிவ சொரூபங்கள்'.

பரை என்று சொல்லப்படும் வாக்கு சக்தி (சிவ) சைதன்ய பிரகாசத்தினின்றும் வேறுபட்டதன்று. அது என்றும் உளதாகிய மகாமந்திரவடிவினது; பூரணமான 'நான்' எனும் விமரிச (ஞான) மயமானது. அகரம் முதல் க்ஷகாரம் ஈறாக உள்ள அனைத்து சக்தி களையும் தன்னகத்தே கொண்டது. அது 'பச்யந்தீ' 'மத்யமை' என்ற வகையில் படிப்படியாக அறிவோன் நிலையைத் தோற்றுவிக்கிறது. இவ்வறிவோன் நிலையில் 'பரை' யாகிற தன் சுயரூபத்தை வெளிக் காட்டாது மாயையால் தாக்குண்ட அறிவோனிடத்து கணந்தோறும் புதுப்புதுவகையில் வேறுபட்டவையாகத் தோன்றும் செயல்களைத் தோற்றுவிக்கிறது. இச்செயல்களால் தெளிவற்ற, ஆயினும் (இது, அது என்று) தனித்தனியான, பொருள்கள் தோன்றுகின்றன; அன்றியும் பேதமற்ற வகையில் (சைதன்யம்) சுத்தமாயிருந்தும் விகற்பச் செயலால் மறைப்புண்டு தோன்றுகிறது. இந்நிலையில் அறியாமையில் சிக்குண்டவர், தன்வயமிழந்தவராய், பிராம்மி முதலான தேவதைகளால் அதிட்டிக்கப்பட்ட ககாரம் முதலான சக்திகளால் மோகமுற்றவராய், ஓர் வரையறைக்குட்பட்ட உடல், பிராணன் முதலானவற்றையே ஆத்மா என்று கருதுகின்றனர். பிராம்மி முதலான தேவதைகள் சீவனின் கட்டுண்ட (பசு) நிலையில் பேதங்களைத் தோற்றுவித்தும் நிலைபெறுவித்தும் அபேதத்தைச் சங்கரித்தும் வருகின்றன; அந்நிலையில் ஒரெல்லைக்குட்பட்ட விகற்பச்செயல்களுக்கே அவை பாத்திரமாகின்றன, பதிநிலையிலோ

வெனில் பேதத்தைச் சங்கரித்தும் அபேதத்தைத் தோற்றுவித்தும் நிலைபெறுவித்தும் வருகின்றன. படிப்படியாக விகற்பத்தைச் சுருக்கி (பேதமற்ற) விகற்பமில்லாத பெருநிலையைத் தோற்றுவிக்குமுகத்தால் சிதானந்த மயமான 'பைரவமுத்திரையை' மேற்கொள்கின்றன.

'இவ்விகற்பங்கள் தோன்றும் நிலையிலும், காணப்படும் இவற்றின் (பிரபஞ்சததின்) பெருமை (விபவம்) அனைத்தும் எனதே என்றும் இப்பிரபஞ்சத்தின் ஆத்மா நானே என்றும் அறிகின்றபோது மகேசனின் தன்மையை ஒருவன் பெற்றவனாகிறான்' —(ஈசுவர பிரத்யபிஜ்ஞை, ஆகமாதிகாரம், 2வது ஆந்நிகம், 12வது காரிகை). ஆகவே மேற்கூறியவாறு தன் சக்திகளாலேயே அறியாமை விளைவிக்கப்படும் நிலையே சம்சாரியின் நிலை என்று பெறப்படுகிறது. (இங்கே கூறப்பட்டது, முத்தியை எய்துதற்கான மூன்று உபாயங்களுள் ஒன்றான சாம்பவோபாயம்).

(வி-ம்) இதுவது வென்றது பேதமற்ற நிலையை உணர்வதே நிர் விகற்ப சைதன்யமாகும். விகற்பம் பேத வுணர்வாகும்.

'பிராம்மி'யோடு சேர்த்தெண்ணப்படும் பிற தேவதைகள் மாகேசுவரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராகீ, இந்திராணீ, சாமுண்டீ என்பவை. 'பதி நிலை'யில் இருவகை உண்டு. (1) அனாதிசித்தரான சிவன் நிலை, (2) யோக நிலை. இங்கே கருதப்படுவது பின்னையது.

'பைரவமுத்திரை' என்பது கண்கள் திறந்து மூடாமல் விழித்தநிலையிலேயே இருந்து மனம் உள்முகமாகவே இருத்தலைக் குறிக்கும். 'சுத்த விகற்பம்' என்பது மேலே கூறப்பட்ட பேத (விகற்ப)நிலையைத் தாண்டி பூரண சைதன்ய அபேத நிலையை அடைவதற்கு முன்னதான இடைப்பட்டநிலை. இதில் ஒருவன் 'பிரபஞ்சமே நான்' என்ற உணர்வுடன் சிவனோடு தன்னை ஐக்கியப்படுத்திக்கொள்கிறான்.

किंच चितिशक्तिरेव भगवती विश्ववमनात् संसारवामाचारत्वाच्च वामेश्वर्याख्या सती, खेचरी-गोचरी-दिक्चरी-भूचरीरूपैः अशेषैः प्रमातृ-अन्तःकरण बहिष्करण-भावस्वभावैः परिस्फुरन्ती, पशुभूमिकायां शून्यपदविश्रान्ता किंचित्कर्तृत्वाद्यात्मक-कलादि शक्त्यात्मना खेचरीचक्रेण गोपितपारमार्थिकचिद्गगनचरीत्वस्वरूपेण चकास्ति ; भेदनिश्चयाभिमान - विकल्पनप्रधानान्तःकरणदेवीरूपेण गोचरीचक्रेण गोपिताभेदनिश्चयाद्यात्मकपारमार्थिकस्वरूपेण प्रकाशते ; भेदालोचनादिप्रधानबहिष्करणदेवतात्मना च दिक्चरीचक्रेण गोपिताभेदप्रथात्मकपारमार्थिक-

स्वरूपेण स्फुरति ; सर्वतो व्यवच्छिन्नाभासस्वभावप्रमेयात्मना च भूचरीचक्रेण गोपितसार्वात्म्यस्वरूपेण पशुहृदयव्यामोहिता भाति । पतिभूमिकायां तु सर्वकर्तृत्वादिशक्त्यात्मकचिद्गगनचरीत्वेन, अभेदनिश्चयाद्यात्मना गोचरीत्वेन, अभेदालोचनाद्यात्मना दिक्चरीत्वेन, स्वाङ्गकल्पाद्वयप्रथासारप्रमेयात्मना च भूचरीत्वेन पतिहृदयविकासिना स्फुरति । तथा च उक्तं सहजचमत्कारपरिजनिताकृतकादरेण भट्टदामोदरेण विमुक्तकेषु—

पूर्णाविच्छिन्नमात्रान्तर्बहिष्करणभावगाः ।
वामेशाद्याः परिज्ञानाज्ञानात् स्युर्मुक्तिबन्धदाः ॥ इति ।

एवं च निजशक्तिव्यामोहितत्तैव संसारित्वम् ।

(இனி கூறப்படுவது இரண்டாவது உபாயமான சாக்தோபாயம்).

(பொ-ள்) மேலும் பகவதி சைதன்ய சக்தியே பிரபஞ்சத்தை உமிழ்வதாலும் வமனம் செய்வதாலும் அல்லது வெளிப்படுத்துவதாலும்) பிரபஞ்சத்தை மாற்றுமுறையில் செலுத்துவதாலும் (வாமாசாரம்) வாமேசுவரீ எனப் பெயர் பெறுகிறது. அச்சக்தியே கட்டுண்ட சீவன் நிலையை ஏற்று அறிவோன் (பிரமாதா) இயல்போடு கூடியிருக்கும்போது 'கேசரீ' என்றும் அந்தக்கரணமாயிருக்கும்போது 'கோசரீ' என்றும், புறக்கரணமாயிருக்கும்போது 'திக்சரீ' என்றும், புறப்பொருள்களாயிருக்கும்போது 'பூசரீ' என்றும் அனைத்துமாய் விளங்குகிருள். 'சீவன்' என்னும் பாத்திரத்தை ஏற்றிருக்கும் போது (உண்மை நிலையை மறைத்துக் கொண்டு) சூன்ய நிலையில் இருந்து கொண்டு சிற்றறிவு முதலானவை பொருத்தப்பெற்று, 'கலை' முதலான சக்தி சொரூபத்தினளாய் சிதாகாசத்தில் சஞ்சரிப்பதாகிய தன் பாரமார்த்திக சொரூபத்தை 'கேசரீ' என்னும் தொகுதியின்கண் மறைத்துக்கொண்டு விளங்குகிருள். உறுதியான பேத உணர்வோடு கூடிய விகற்பித்தலையே முதன்மையாகக் கொண்டுள்ள அந்தக்கரணதேவி ரூபத்தில், திடமான அபேத உணர்வாகிற பாரமார்த்திக சொரூபத்தை கோசரீ தொகுதியின்கண் மறைத்துக்கொண்டு விளங்குகிருள். பேத உணர்வு முதலானவற்றையே முக்கியமாகக் கொண்ட புறக்கரண தேவிரூபத்தில், அபேத உணர்வை வெளிப்படுத்தக்கூடிய பாரமார்த்திக சொரூபத்தை திக்சரீ தொகுதியின்கண் மறைத்துக்கொண்டு விளங்குகிருள். யாங்கணும் வேறுபட்ட பல்வேறு தோற்றங்களாய் (ஆபாசம்) காணப்படும் புறப்பொருள் (பிரமேயம்) வடிவில் உள்ள அவள்

(சைதன்யம்) எல்லாவற்றுள்ளும் உறைவதாகிய சொரூபத்தை பூசரீ தொகுதியின்கண் மறைத்துக்கொண்டு சீவன்களுடைய உள்ளத்தில் அறியாமையைத் தோற்றுவித்து விளங்குகிருள். பதி யெனும் பாத்திரத்தை ஏற்கும்போது, சர்வ கர்த்ருத்வம் முதலான சக்திகளைக் கொண்டதான 'சித்கனசரீ' யாகவும், உறுதியான அபேத உணர்வு முதலானவற்றை சொரூபமாகக்கொண்ட 'கோசரீ' யாகவும், அபேத ஆலோசனை முதலானவற்றை சொரூபமாகக் கொண்ட 'திக்சரீ' யாகவும், புறப்பொருள்களை தன் அங்கங்களை யொத்த நிலையில் அபேத நிலையில் கண்டு (வெளித்தோற்றமாகக்) கருதும் 'பூசரீ' யாகவும் விளங்குகின்ற அச்சித்சக்தி, பதி இதயத்தை மலரச்செய்து கொண்டு விளங்குகிருள்.

இயல்பான சமத்காரத்தை உடையவர் என்ற காரணத்தால் உள்ளார்ந்த மதிப்பிற்குரியவரான பட்டர் தாமோதரரால் அவருடைய தனிப்பாடல்களில் மேலே கூறப்பட்ட கருத்து கூறப்பட்டுள்ளது—

'சிச்சக்தியானவள் வாமேசுவரீ முதலான தேவதைகள் உருவில் பிரமாதா (அறிவோன்), அந்தக்கரணம், புறக்கரணம், புறப் பொருள்கள் ஆகியவற்றுள் நின்று பூரண ஞானத்தின் வாயிலாக முத்தியளித்து சீவனைப் பரிபூரணனுக்கியும், அஞ்ஞானத்தின் வாயிலாக பந்தத்தை அளித்து அணுவாக்கியும் வருகின்ருள்'.

இவ்வாருக ஒருவன் தன் சக்தியை அறியாத நிலையே சம்சாரி நிலை எனப்படுவதாகும்.

(வி-ம்) 'கேசரீ' என்பது ஆகாயத்தில் (கம் = ஆகாயம்) சஞ்சரிப்பது என்று பொருள்படும். ஆகாசம் சைதன்யத்தைக் குறிக்கும். 'சிதாகாசம்' என்ற சொல்லைக் காண்க. 'கோசரீ' என்பது இந்திரியங்களோடு தொடர்புள்ள அந்தக் கரணத்தில் (கோ = இந்திரியம் புறத்தே செல்லும் தன்மை கொண்டது) சஞ்சரிப்பது. 'திக்சரீ,' பல திசைகளிலும் சஞ்சரிப்பது; புற கரணங்கள் பல திசை களிலும் செல்வதால் அவற்றுடன் இது தொடர்புள்ளது. 'பூசரீ' பூமியில் உள்ள பொருள்களிடத்தில் படர்ந்திருப்பது.

'அந்தக்கரணம்' மூவகைப்படும் (1) புத்தி—இது இன்னது என்று துணிதற்குக் கருவி (2) அகங்காரம்—யான் இதனைச் செய்வேன் என்றவாறு எழுச்சியுறும் (3) மனம்—நினைத்தல், ஐயுறுதல் போன்றவற்றைச் செய்யும் கருவி.

अपि च चिदात्मनः परमेश्वरस्य स्वा अनपायिनी एकैव स्फुरत्तासारकर्तृतात्मा ऐश्वर्यशक्तिः । सा यदा स्वरूपं गोपयित्वा पाशवे पदे प्राणापान - समान - शक्ति-दशाभिः जाग्रत्स्वप्नसुषुप्तिभूमिभिः देह - प्राण - पुर्यष्टक-कलाभिश्च व्यामोहयति, तदा तद्व्यामोहितता संसारित्वम्; यदा तु मध्यधामोल्लासां उदानशक्तिं विश्वव्याप्ति-सारां च व्यानशक्तिं, तुर्यदशारूपां तुर्यातीतदशारूपां च चिदानन्दघनां उन्मीलय-यति, तदा देहाद्यवस्थायामपि पतिदशात्मा जीवन्मुक्तिर्भवति । एवं त्रिधा स्वशक्ति-व्यामोहितता व्याख्याता । 'चिद्वत्' इति (९) सूत्रे चित्प्रकाशो गृहीतसङ्कोचः संसारी इत्युक्तं, इह तु स्वशक्तिव्यामोहितत्वेन अस्य संसारित्वं भवति, इति भङ्ग्य-न्तरेण उक्तम् । एवं सङ्कुचितशक्तिः प्राणादिमानपि यदा स्वशक्तिव्यामोहितो न भवति, तदा अयम्....'शरीरी परमेश्वरः' इति आम्नायस्थित्या शिवभट्टारक एव—इति भङ्ग्या निरूपितं भवति । यदागमः—

'मनुष्यदेहमास्थाय छन्नास्ते परमेश्वराः' इति ।

उक्तं च प्रत्यभिज्ञाटीकायाम्—

'शरीरमेव घटाद्यपि वा ये षट्त्रिंशत्तत्त्वमयम् ।
शिवरूपतया पश्यन्ति तेऽपि सिध्यन्ति' ॥ इति ।

இனி கூறப்படுவது மூன்றுவது உபாயமான 'ஆணவோபாயம்'.

சைதன்யமான பரமேசுவரனுக்கு உரித்தான ஐசுவரிய சக்தி (சுதந்திரத்தன்மை) தனித்தன்மை வாய்ந்தது, சோர்வுறுதது, கர்த் ருத்துவத்தை (விமர்சத்தை) இயல்பாகக் கொண்டது, பிரகாச (ஸ்புரத்தா) மயமானது. இச்சக்தி தன் சொரூபத்தை மறைத்துக் கொண்டு சீவான்ம நிலையில், பிராண, அபான, சமான சக்தி நிலைகள், விழிப்பு, கனவு, துயில் நிலைகள், உடல், பிராணன், புர்யஷ்டகம், கலைகள் ஆகியவற்றுல் உயிரை அறியாமை நிலைக்கு உள்ளாக்குகிறது. அந்நிலையே (பிறப்பிற்குட்படும்) சம்சாரி நிலை யாகும். இவ்வைசுவரிய சக்தி (ஈசுவரனுடைய சக்தி) சுழுமுனை வழியே செல்லும்போது துரிய நிலையில் செயற்படும் உதான சக்தி யையும் பிரபஞ்சம் முழுதும் துரியாதீத நிலையில் விரவி நிற்கும் வியான சக்தியையும் எழுப்பும்போது சிவானந்தம் செறிந்த நிலை ஏற் படுகிறது. அப்போது சீவன் உடலோடு கூடியிருந்தாலும் பதி நிலையை எய்தி சீவன்முத்தர் என்றழைக்கப்படுகிறது.

இங்ஙனம் தன் சக்திகளாலேயே ஆன்மா அறியாமை நிலையில் மூவகையில் ஆழ்த்தப்படுகிறது என்பது உணர்த்தப்பட்டது.

ஒன்பதாம் சூத்திரத்தில் 'சித்வத்' என்றசொல் 'சைதன்ய பிரகாசமே குறுக்க நிலையடைந்து சம்சாரி எனப்படுகிறது' என்று கூறப்பட்டுள்ளது. இங்கே 'தன் சக்திகளால் அறியாமை தூண்டப் பட்டதன் காரணமாக சீவன் சம்சாரி நிலையை அடைகிறுன்' என்று வேறுவகையாகக் கூறப்பட்டுள்ளது. அவ்வளவே. ஆகவே குறுக்க மடையப்பெற்ற சைதன்யம் (சீவன்) பிராணன் முதலானவற்றோடு கூடியிருக்கும் நிலையிலும், தன் சக்திகளால் வியாமோகம் (அறி யாமை) ஏற்படாதபோது இம்மத மரபுப்படி 'சரீரத்தோடு கூடிய பரமேசுவரனே' அதாவது சிவபட்டாரகனே என்று கருதப்படுகிறுன் என்றும் கூறலாம். இதற்கு ஆகமச்சான்று—

'மானுட உடல் தாங்கி நிற்கும் அவர்கள் பரமேசுவரர்களே'.

பிரத்யபிஜ்ஞாடீகையிலும் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது— 'எவர்கள் முப்பத்தாறு தத்துவங்களாலான சரீரத்தையும் ஏன், குடம் முதலானவற்றையும் கூட சிவரூபமாகவே காண்கின்றனரோ, அவர் களும் சித்தி பெற்றவர்களே'.

(வி-ம்) பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்ற ஐந்து பிராணன்கள் யோகநெறியில் சொல்லப்படுவன. உடலியக்கத்திற்கு அவை பயன்படுவன. இம்மதத்தின்படி வியானனும் உதானனும் பிராணவாயுக்கள் அல்ல சக்திகள்.

'புரியஷ்டகம்' என்பது எட்டு தத்துவங்களைக் கொண்ட புரி என்று பொருள்படும். இதை தன்மாத்திரைகள் ஐந்து, மனம், புத்தி, அகங்காரம் ஆகிய எட்டும் அடங்கிய சூக்கும சரீரம் என்பர். சுழுமுனை (சூஷும்ஞ) என்னும் பிராணநாடி முள்ளெலும்புத்தண்டின் நடுவே உள்ளது. உதானவாயு அதன் வழியே மேலே சென்று துரிய நிலையைத் தோற்றுவிக்கவல்லது. இந்நிலையில் பேத உணர்வு கெடும்.

उक्तसूत्रार्थप्रातिपक्ष्येण तत्त्वदृष्टिं दर्शयितुमाह—

तत्परिज्ञाने चित्तमेव अन्तर्मुखीभावेन

चेतनपदाध्यारोहात् चितिः ॥ १३ ॥

पूर्वसूत्रव्याख्याप्रसङ्गेन प्रमेयदृष्ट्या वितत्य व्याख्यातप्रायमेतत् सूत्रम्। शब्दसङ्गत्या तु अधुना व्याख्यायते। 'तस्य' आत्मीयस्य पञ्चकृत्यकारित्वस्य 'परिज्ञाने' सति अपरिज्ञानलक्षणकारणापगमात् स्वशक्तिव्यामोहिततानिवृत्तौ स्वातन्त्र्यलाभात् प्राक् व्याख्यातं यत् 'चित्तं' तदेव सङ्कोचिनीं बहिर्मुखतां जहत्, 'अन्तर्मुखी-भावेन चेतनपदाध्यारोहात्, ग्राहकभूमिकाक्रमणक्रमेण सङ्कोचकलाया अपि विगल-नेन स्वरूपापत्त्या 'चितिः' भवति; स्वां चिन्मयीं परां भूमिमाविशति इत्यर्थः॥

(பொ-ள்) முந்தைய சூத்திரப்பொருளின் தத்துவப்பொருளைக் காண்டற்கு அதுவே முறைமாற்றி இப்போது கூறப்படுகிறது.

[சூ. 13] அதனுடைய (ஐந்தொழில் புரிவோரின் தன்மை பற்றிய) முழுமையான மெய்யறிவைச் சித்தம் (சீவசைதன்யம்) உள்முகமாக உணர்ந்தால் அதுவே சேதனநிலை எய்தப்பெற்று 'சிதி' (சிவ சைதன்யம்) ஆகிறது.

முன் சூத்திர வியாக்யானத்திலேயே பிரமேயகோணத்தில் இச் சூத்திரம் விரிவாக விளக்கப்பட்டுவிட்டதாகக் கொள்ளலாம். இங்குள்ள சொற்களின் இயைபே இங்கே விளக்கப்படுகிறது.

'அதனுடைய' என்பது பஞ்சகிருத்யம் புரியும் ஆத்மாவின் தன்மை என்று பொருள்படும். 'முழுமையான மெய்யறிவு' என்பது இவ்வறிவுக்குத் தடையாயிருந்த ஒன்றின் நீக்கத்தைக் குறிக்கும். அத்தடையாவது தன் சக்திகளால் தோற்றுவிக்கப்பட்ட அறியாமை. அது நீங்கவும் 'தன்வயத்தனும் தன்மை' பெறப்படுகிறது. அப்படிப் பெறப்படும்போது முன்பு விளக்கப்பட்ட 'சித்தம்' சைதன்யக் குறுக்கத்தை விளைவிக்கும் வெளிநோக்கை விடுத்து, உள்முக நோக்கினைக் கொண்டு பரம சேதன நிலையை எட்டிப்பிடிக்கும் போது படிப்படியாக பரப்பிரமாதாவை அடையும் வகையில், சக்திக் குறுக்கத்தை ஏற்படுத்தும் கலை கழியவும் இயல்பான 'சிதி' சொரூபத்தை அடைகிறது. இப்போது அது சின்மயமான பரநிலையை அடைகிறது என்பது பொருள்.

ननु यदि पारमार्थिकं चिच्छक्तिपदं सकलभेदकवलनस्वभावं तत् अस्य मायापदेऽपि तथारूपेण भवितव्यं यथा जलदाच्छादितस्यापि भानोः भावावभासक-म् इत्याशङ्क्य आह—

चितिवह्निरवरोहपदे छन्नोऽपि मात्रया मेयेन्धनं प्लुष्यति ॥ १४ ॥

'चितिरेव' विश्वग्रसनशीलत्वात् 'वह्निः'; असौ एव 'अवरोहपदे मायाप्रमातृतायां' 'छन्नोऽपि' स्वातन्त्र्यात् आच्छादितस्वभावोऽपि, भूरिभूतिच्छन्नाग्निवत् 'मात्रया'–अंशेन, नीलपीतादिप्रमेयेन्धनं 'प्लुष्यति' स्वात्मसात् करोति । मात्रापदस्य इदम् आकूतम्-यत् कवलयन् अपि सार्वात्म्येन न ग्रसते, अपि तु अंशेन; संस्कारात्मना उत्थापयति । ग्रासकत्वं च सर्वप्रमातॄणां स्वानुभवत एव सिद्धम् । यदुक्तं श्रीमदुत्पलदेवपादैः निजस्तोत्रेषु—

वर्तन्ते जन्तवोऽशेषा अपि ब्रह्मेन्द्रविष्णवः ।
ग्रसमानास्ततो वन्दे देव विश्वं भवन्मयम् ॥ इति ।

(பொ-ள்) பாரமார்த்திக நிலையிலுள்ள சித்சக்தி பேதங்களனைத்தையும் விழுங்கிவிடும் இயல்புடையது என்பது உண்மையானால், எப்படி மேகங்களால் சூழப்பட்ட நிலையிலும் சூரியன் பொருள்களை விளக்கி வருகின்றதோ அப்படி (பிரபஞ்ச உருவில்) மாயை நிலையிலும் அவ்வியல்பு இருக்கத்தானே வேண்டும் என்ற வினா எழுகிறது. அதற்கு விடை கீழே தரப்படுகிறது.

[சூ. 14] 'சைதன்யமெனும் தீ மாயையால் சூழப்பெற்று கீழ்நிலைக்கு இறங்கும்போது பிரமேயம் (அறியப்படு பொருள்) என்னும் எரி பொருளை ஓரளவு எரிக்கிறது.'

சிதி (சைதன்யம்) பிரபஞ்சத்தை விழுங்கி (தன்மயமாக்கி) விடுவதால் தீயுடன் ஒப்பிடப்பட்டுள்ளது. அது மாயாபிரமாதா (சீவன்) நிலைக்கு இறங்கி வரும்போது மாயையால் சூழப்பட்டிருந்தும் இயல்பான சுதந்திரத்தன்மையால் நீலம், மஞ்சள் போன்ற பிரமேயமாகிற எரிபொருளை மிகுதியான சாம்பலால் சூழப்பெற்ற தீ போல ஓரளவு எரித்துவிடுகிறது; அதாவது தன் வயமாக்கி விடுகிறது. 'ஓரளவு' என்பதன் கருத்து இதுவே; சைதன்யம் பிரபஞ்சப்பொருளை விழுங்கினாலும் அறவே விழுங்கி விடுவதில்லை, ஓரளவுதான் விழுங்குகிறது; ஏனெனில் அவை மீண்டும் சம்ஸ்காரத்தைக் கொண்டு தோற்றுவிக்கப்படுகின்றன. (எல்லா அனுபவப்பொருள்களும்) அந்தந்த அறிவோர்களால் (பிரமாதாக்களால்) தத்தம் சைதன்யவயமாக்கப்படுகின்றன என்பது அவரவர் அனுபவத்திலிருந்தே சித்திக்கிறது. உத்பலதேவரால் தனது 'ஸ்தோத்ராவளியில்' இது கூறப்பட்டுள்ளது.

'பிரமன், இந்திரன், விஷ்ணு முதலான எல்லா உயிர்களும் பொருள்களைத் தம் வயமாக்கிக்கொண்டிருக்கின்றன. ஆதலின் தேவனே, தங்கள் (சைதன்ய) மயமான இப்பிரபஞ்சத்தை நான் வணங்குகிறேன். (சிவஸ்தோத்ராவளீ, ஸ்தோத்ரம் 20, சுலோகம் 17).

यदा पुनः करणेश्वरी प्रसरसङ्कोचं सम्पाद्य सर्गसंहारक्रमपरिशीलनयुक्तिं आविशति तदा—

बललाभे विश्वमात्मसात्करोति ॥ १५ ॥

चितिरेव देहप्राणाद्याच्छादननिमज्जनेन स्वरूपं उन्मग्नत्वेन स्फारयन्ती बलम् ; यथोक्तं 'तदाक्रम्य बलं मन्त्राः...........' इति ।

एवं च 'बललाभे' उन्मग्नस्वरूपाश्रयणे, क्षित्यादिसदाशिवान्तं 'विश्वं आत्मसात् करोति'—स्वस्वरूपाभेदेन निर्भासयति । तदुक्तं पूर्वगुरुभिः स्वभाषामयेषु क्रमसूत्रेषु—

'यथा वह्निरुद्बोधितो दाह्यं दहति, तथा विषयपाशान् भक्षयेत्' इति ।
न चैवं वक्तव्यम् । विश्वात्मसात्काररूपा समावेशभूः कादाचित्की । कथं उपादेया इयं स्यात् इति ; यतो देहाद्युन्मज्जननिमज्जनवशेन इदम् अस्याः कादाचित्कत्वं इव आभाति । वस्तुतस्तु चितिस्वातन्त्र्यावभासितदेहाद्युन्मज्जनात् एव कादाचित्कत्वम् । एषा तु सदैव प्रकाशमाना ; अन्यथा तत् देहादि अपि न प्रकाशेत । अत एव देहादिप्रमातृताभिमाननिमज्जनाय अभ्यासः, न तु सदा प्रथमानतासारप्रमातृताप्राप्त्यर्थम् इति श्रीप्रत्यभिज्ञाकाराः ॥

(பொ-ள்) (சாதகன்) தெய்விக இந்திரியங்களை வெளியே செலுத்தியும் உள்முகமாகத் திருப்பியும், சிருட்டி சம்ஹாரம் ஆகிய கிரமங்களை மேற்கொள்ளும்போது—

[சூ. 15] (சைதன்யத்திற்கு இயல்பாக உள்ள) பலத்தை அடையும் போது பிரபஞ்சத்தை தனதாக்கிக்கொள்கிறான் (சாதகன்).

சைதன்யமே உடல் பிராணன் முதலான போர்வைகளை மறைத்து விடுவதாலும் சுயரூபத்தை மேலெழச்செய்வதாலும் மேலோங்கி நிற்பது 'பலம்'. வசுகுப்தரின் ஸ்பந்த காரிகையில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது—'மந்திரர்கள் சைதன்யத்தின் பலத்தைப்

பெற்றவர்களாய்......(சர்வக்ஞர்களாய் பலம் பொருந்தியவர்களா கிறார்கள்'). இங்ஙனம் பலத்தைப் பெற்று எழுச்சியுறும் சைதன்ய ரூபத்தை யடைந்து பூமி முதல் சதாசிவம் ஈறாக உள்ள பிரபஞ்சத்தைத் தன்வயப்படுத்திக்கொள்கின்றனர்; அதாவது தன் உண்மை சொரூபத்தோடு ஐக்கியநிலையில் காணப்படுகின்றனர். இது பண்டைய குருமார்களால் தமது கிரம சூத்திரங்களில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது—'உந்தப்பட்ட தீ எவ்வாறு எரிபொருளை எரிக்கிறதோ, அவ்வாறு கட்டுகளாகச் செயல்படும் விடயங்களை அகற்றி விடவேண்டும்'.

ஓர் ஆட்சேபம் எழலாம்: 'பிரபஞ்சத்தைத் தன்வயப்படுத்தலாகிற 'சமாவேசத்திற்கு' நிலைக்களனாக உள்ள சைதன்யம் ஓரொரு கால் நிகழ்வதுதானே?' இதை எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? இவ்வாட்சேபம் சரியல்ல. உடல் முதலானவற்றின் தோற்றமும் மறைவும் சைதன்யத்தின் நிலையற்ற தன்மையைக் காட்டுவதுபோல தோன்றும். சைதன்யத்திற்கே உள்ள சுதந்திரத்தன்மையின் காரணமாக உடல் முதலானவை ஒரு வெளித்தோற்றமாகக் காணப்படுவதே. அது அவ்வப்போது தோன்றுவதாகக் கருதப்படுகிறது. உண்மையில் சைதன்யம் எக்காலத்தும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது; அல்லாவிடில் உடல் முதலானவை கூட வெளிப்படமாட்டா. உயிர் உடலோடு தன்னை ஐக்கியப்படுத்திக்கொள்வதைத் தவிர்ப்பதற்காகவே யோகப் பயிற்சி செய்யப்படவேண்டியிருக்கிறதே யன்றி, என்றுமே பிரகாசமயமாய் இருக்கும் பரப்பிரமாதாவாக இருக்க வேண்டும் என்பதற்கல்ல; இவ்வாறு பிரத்யபிஜ்ஞாகாரர்கள் கூறுகின்றனர்.

एवं च—

चिदानन्दलाभे देहादिषु चेत्यमानेष्वपि चिदैकात्म्यप्रतिपत्तिदार्ढ्यं जीवन्मुक्तिः ॥ १६ ॥

विश्वात्मसात्कारात्मनि समावेशरूपे 'चिदानन्दे लब्धे' व्युत्थानदशायां दलकल्पतया देहप्राणनीलसुखादिषु आभासमानेषु अपि, यत्समावेशसंस्कारबलात् प्रतिपादयिष्यमाणयुक्तिक्रमोपबृंहितात् चिदैकात्म्यप्रतिपत्तिदार्ढ्यं—अविचला, चिदेकत्वप्रथा, सैव 'जीवन्मुक्तिः'—जीवतः प्राणान् अपि धारयतः मुक्तिः ; प्रत्यभिज्ञातनिजस्वरूपविद्रावितशेषपाशराशित्वात् । यथोक्तं स्पन्दशास्त्रे—

'इति वा यस्य संवित्तिः क्रीडात्वेनाखिलं जगत् ।
स पश्यन्सततं युक्तो जीवन्मुक्तो न संशयः ॥' इति ।

(பொ-ள்) [சூ.16] உடல் முதலானவை தொழிற்பட்டுக்கொண் டிருக்கும்போதே சிதானந்தம் அடையப்பெற்று சைதன்யத்தோடு ஒன்றிய செறிந்த உணர்வு ஏற்படுமானுல் அதுவே சீவன்முக்தி.

பிரபஞ்சத்தை சைதன்யம் தன்னுடன் ஒன்றியதாகக் காண்ப தான சமாவேசம் ஏற்பட்டு சிதானந்தத்தை அடைந்த நிலையில், (யோகத்தினின்று) விழித்த அன்ருட செயன்முறை நிலையிலும், உடல், பிராணன், நீலம், சுகம் என்றவாறு வெவ்வேருன அனுபவத் தோற்றங்கள் காணப்படினும் சைதன்யத்தோடு சமாவேசம் அடைந்த தன் வாசனுபலத்தால் பின்னே சொல்லப்பட விருக்கின்ற யோகக் கிரமத்தால் சைதன்யத்தோடு உறுதியாக ஒன்றும்நிலை, அதாவது மாருத சைதன்யமேயாதல், சீவன்முக்தி எனப்படும். சீவனமுக்தி என்பது பிராணன் உடலில் இருக்கும்போது வீடுபேற்றினை அடைதல். இந்நிலையில் தனது இயல்பான சொருபத்தை நினைவு கூர்வதால் அனைத்து பாசங்களும் பறந்தோடிவிடுகின்றன. இது ஸ்பந்த சாஸ்திரத்தில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது—

'எவனெருவன் மேலே (நூலில்) சொன்னவாறு பிரபஞ்சம் முழுவதையுமே (தெய்வீகத்) திருவிளையாடலாக அறிகிருனே, பரம சைதன்யத்தோடு ஒன்றியுள்ள அவன் ஐயமின்றி சீவன் முக்தனே யாவான்.'—(வசுகுப்தரின் ஸ்பந்தகாரிகை, நிஷ்யந்தம் 2, காரிகை 5).

(வி-ம்) 'தேகம், பிராணன்' என்பவை முறையே புறத்தே உடலையும் அகத்தே பிராணவாயுவையும் கொண்ட அறிவோனையும் (Subject) நீலம், சுகம், என்பவை கண் போன்ற புறக்கரணங்களாலும் அந்தக் கரணத்தாலும் உணரப்படும் 'பொருளையும்' (object) குறிக்கின்றன.

अथ कथं चिदानन्दलाभो भवति ? इत्याह-

मध्यविकासाच्चिदानन्दलाभः ॥ १७ ॥

सर्वान्तरतमत्वेन वर्तमानत्वात् तद्भित्तिलग्नतां विना च कस्यचित् अपि स्वरूपानुपपत्तेः संविदेव भगवती 'मध्यम्' । सा तु मायादशायां तथाभूतापि स्वरूपं गूहयित्वा 'प्राक् संवित्प्राणे परिणता' इति नीत्या प्राणशक्तिभूमिं स्वीकृत्य, अवरोहक्रमेण

बुद्धिदेहादिभुव मधिशयाना नाडीसहस्रसरणिं अनुसृता । तत्रापि च पलाशपर्णमध्यशाखान्यायेन आब्रह्मरन्ध्रात् अधोवक्त्रपर्यन्तं प्राणशक्तिब्रह्माश्रयमध्यमनाडीरूपतया प्राधान्येन स्थिता ; तत एव सर्ववृत्तीनां उदयात्, तत्रैव च विश्रामात् । एवं भूतापि एषा पशूनां निमीलितस्वरूपैव स्थिता । यदा तु उक्तयुक्तिक्रमेण सर्वान्तरतमत्वे मध्यभूता संविद्भगवती विलसति, यदि वा वक्ष्यमाणक्रमेण मध्यभूता ब्रह्मनाडी विकसति तदा 'तद्विकासात् चिदानन्दस्य' उक्तरूपस्य 'लाभः' प्राप्तिर्भवति । ततश्च प्रागुक्ता जीवन्मुक्तिः ॥ १७ ॥

(பொ-ள்) சிதானந்தப்பேறு எங்ஙனம் கிட்டுகிறது? அதைக் கூறுகிறார் —

[சூ.17] மத்யத்தை மலரச்செய்வதன் மூலம் சிதானந்தப்பேறு கிட்டுகிறது.

எல்லாவற்றிற்கும் உள்ளீடாக இருப்பதாலும் அதை அடிப்படையாகக் கொண்டன்றி எப்பொருளின் சொரூபமும், தெளிவாக உணரப்பட வியலாததாலும், சம்வித் (சைதன்யம்) 'மத்யம்' என்று சொல்லப்படுகிறது. இச் சைதன்யமே மாயாதசையில் அடிப்படை உண்மையாயினும், தன் சொரூபத்தை மறைத்துக்கொண்டு, 'தொடக்கத்தில் சைதன்யம் பிராணனாகப் பரிணமிக்கிறது' என்று கூறப்பட்டவாறு பிராணசக்தி நிலையை மேற்கொண்டு பின்னர் படிப் படியாக கீழ்நிலைகளுக்கு இறங்கி புத்தி, உடல் முதலான பாத்திரங் களில் தோய்ந்து ஆயிரம் நாடிகளின் வழியாகவும் செல்கிறது. அப்படிப்பட்ட நிலையிலும் ஆலிலையின் நடுநரம்புபோல பிரம்மரந்திரம் முதல் கீழ்வாய் வரையிலும் தொழிற்படும் பிராணசக்தியாகிற பிரம்மத்தின் ஆசிரயமான மத்திய நாடியில் இச் சைதன்யம் சிறப்பாக இருக்கிறது. அது மத்திய நாடி எனப்படுவதற்குக் காரணம் அங் கிருந்துதான் எல்லா செயல்களும் தொடங்குகின்றன. அங்கேயே தான் மீண்டும் நிலைகொள்கின்றன. இவ்விதம் உள்ளுறையப் பெற்றிருந்தும் அறியாமையிலுழலும் உயிர்களுக்கு அதன் சொரூபம் தெரிவதில்லை. (நூல்களில்) விவரிக்கப்பட்டுள்ள யோகக் கிரமத்தில் எப்போது அனைத்திற்கும் உள்ளே உள்ளே நடுப்பகுதியில் இருக்கிற மேலான சைதன்யம் மலர்கிறதோ, அல்லது பின்னே கூறப்படுவது போல் மத்திய நாடி பரிமளிக்கிறதோ, அப்போது அம்லர்ச்சியின் காரணத்தால் மேலே கூறப்பட்டுள்ளவாறு சிதானந்தப்பேறு ஏற்படு கிறது. பின்னர் மேலே கூறப்பட்ட சீவன் முக்தி சித்திக்கிறது.

(வி-ம்) 'பிராணசக்தி' என்பது பிராணவாயுவினின்றும் வேறுபட்டது. 'மத்யம்' எனப்படுவது சம்புவை நோக்கும்போது 'நான்' என்ற மாத்திரையில் உணரப்படும் சைதன்யம்; சக்தியை நோக்கும் போது ஞானமாயும் கிரியையாயும் கொள்ளப்படும்; சீவனை நோக்க 'இடை','பிங்கலை' நாடிகளுக்கிடைப்பட்ட 'சுஷும்னை' நாடியாகவோ, 'பிராணவாயு' 'அபான வாயுவுக்கு' இடைப்பட்ட 'சமான வாயுவாகவோ' கொள்ளப்படும். சூக்கும சரீரத்தில் உள்ளனவாகக் கருதப்படும் சக்கரங்கள் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை, பிரம்மரந்திரம் அல்லது சகஸ்ராரம் என்பன. 'மேலான சைதன்யம் மலர்கிறது' என்பது சாம்பவோபாயத்திலும் சாக்தோபாயத்திலும் கூறப்படுவதான பஞ்சகிருத்யத் தொழிலைச் சீவன் பயிலுவதால் ஏற்படுவதைக் குறிக்கிறது. 'மத்ய நாடி பரிமளித்தல்' என்பது ஆணவோபாயத்தை நோக்காகக் கொண்டு கூறப்பட்டது.

मध्यविकासे युक्तिमाह—

विकल्पक्षयशक्तिसंकोचविकासवाहच्छेदाद्यन्तकोटिनिभालनादय इहोपायाः ॥ १८ ॥

'इह' मध्यशक्तिविकासे 'विकल्पक्षयादय उपायाः' प्रागुपदिष्टपञ्चविधकृत्यकारित्वाद्यनुसरणेन सर्वमध्यभूतायाः संविदो विकासो जायते इति अभिहितप्रायम् । उपायान्तरं अपि तु उच्यते—प्राणायाममुद्राबन्धादिसमस्तयन्त्रत्रोटनेन सुखोपायमेव हृदये निहितचित्तः, उक्तयुक्त्या स्वस्थितिप्रतिबन्धकं विकल्पम् अकिंचिच्चिन्तकत्वेन प्रशमयन् अविकल्पपरामर्शेन देहाद्यकलुषस्वचित्प्रमातृतानिभालनप्रवणः, अचिरादेव उन्मिषद्विकासां तुर्यतुर्यातीतसमावेशदशाम् आसादयति । तथोक्तम् 'विकल्पहाने नैकाग्र्यात्क्रमेणेश्वरतापदम्' इति श्रीप्रत्यभिज्ञायाम् । श्रीस्पन्देऽपि 'यदा क्षोभः प्रलीयेत तदा स्यात् परमं पदम्' इति । श्रीज्ञानगर्भेऽपि

विहाय सकलाः क्रिया जननि मानसीः सर्वतो
विमुक्तकरणक्रियानुसृतिपारतन्त्र्योज्ज्वलम् ।
स्थितैस्त्वदनुभावतः सपदि वेद्यते सा परा
दशा नृभिरतन्द्रितासमसुखामृतस्यन्दिनी ॥' इति ।

(பொ-ள்) மத்திய விகாசம் ஏற்படும் முறை கீழே கூறப்படுகிறது.

[சூ.18] இதன் உபாயங்களாவன, விகற்பம் தேய்தல், சக்தியின் குறுக்கமும் விரிவும், பிராணபானன்களைக் கட்டுப்படுத்தல், ஆதியந்த கோடிகளில் நின்று யோகநிட்டையிருத்தல் முதலானவையாகும்.

மத்தியசக்தி விகாசத்தில் விகற்பம் தேய்தல் முதலானவை உபாயங்களாகும். முன்னரே விளக்கப்பட்டுள்ளபடி ஐந்தொழில் புரிதலைப் பின்பற்றுவதால் அனைத்தின் மத்தியில் இருக்கும் சைதன்யத்தின் விகாசம் ஏற்படுகிறது. வேறொரு உபாயமும் கூறப்பட்டுள்ளது. பிராணாயாமம், முத்திரைகள், பந்தங்கள் முதலான பல்வேறு கடுமையான தந்திரங்களை விடுத்து எளிதான ஒரு உபாயம் உண்டு. குறிப்பிடப்பட்டுள்ள முறையில் 'சம்வித்' அல்லது 'சைதன்யத்தில் ஒருவன் தன் ஆத்ம சைதன்யத்தை ஒருமுகப்படுத்துதல் அவ்வுபாயமாகும். இந்நிலையில் அவன் தன் உண்மை நிலையை உணர்வதில் தடையாயுள்ள விகற்ப உணர்வைப் பிறிதொன்றையும் எண்ணாத வகையில் அடக்கி, அவிகற்ப நிலையைப் பற்றி, உடல் முதலானவற்றால் பாதிக்கப்படாத தன் சைதன்ய பிரமாதாவாகவே தொடர்ந்து கருதி வருவான். பிறகு விரைவிலேயே முதலில் மலரத் தொடங்கியுள்ள துரிய நிலையிலும் பின்னர் துரியாதீத நிலையிலும் ஒன்றிய நிலையை அடைகிறான். 'ஈசுவரப் பிரத்யபிஜ்ஞை' என்ற நூலில் (4-வது ஆந்நிகம், காரிகை 11) இது இவ்வாறு கூறப்பட்டுள்ளது—

'விகற்ப உணர்வை விடுத்து ஒருமுகப்படுத்துவதன்மூலம் படிப்படியாக ஈசுவர நிலையை அடைகிறான்'.

ஸ்பந்த சாஸ்திரமும் இதைப்பற்றிக் கூறுகிறது—

'உள்ளம் அலைப்புறுதல் எப்போது நிற்கிறதோ அப்போது ஒருவன் மேலான நிலையை அடைகிறான். (ஸ்பந்தகாரிகை நி. 1. கா. 9). ஞானகர்ப்பத்திலும்—

'மனத்தைப் பற்றிய எல்லாச் செயல்களையும் முழுதும் விட்டு, கரணங்களின் செயல்களை யொட்டியே செல்வதான சுதந்திர மின்மையை விடுவதால் தூயநிலை யடையப்பெற்று, ஓ தாயே, நினதருளால் அம்மேலான நிலையை மக்கள் விரைவில் அடைகிறார்கள். அந்நிலையில் குறைவற்றதும் ஒப்பற்றதுமான சுகாமிருதம் பொழியத் தொடங்குகிறது'.

(வி-ம்) 'முத்திரை' என்பது யோக முத்திரையைக் குறிக்கும், சில இடங்களில் புலனடக்கத்தையும் குறிக்கும்.

अयं च उपायः मूर्धन्यत्वात् प्रत्यभिज्ञायां प्रतिपादितत्वात् आदौ उक्तः। शक्तिसंकोचादयस्तु यद्यपि प्रत्यभिज्ञायां न प्रतिपादिताः, तथापि आम्नायिकत्वात् अस्माभिः प्रसङ्गात् प्रदर्श्यन्ते; बहुषु हि प्रदर्शितेषु कश्चित् केनचित् प्रवेक्ष्यति इति।

'शक्तेः संकोचः'—इन्द्रियद्वारेण प्रसरन्त्या एव आकुञ्चनक्रमेण उन्मुखीकरणम्। यथोक्तं आथर्वणिकोपनिषत्सु कठवल्ल्यां चतुर्थवल्लीप्रथमतन्त्रे।

पराञ्चि खानि व्यतृणत्स्वयंभू-
स्तस्मात्पराङ् पश्यति नान्तरात्मन्।
कश्चिद्धीरः प्रत्यगात्मानमैक्षद्
आवृत्तचक्षुरमृतत्वमश्नन्॥ इति

प्रसृताया अपि वा कूर्माङ्गसंकोचवत् त्रासमये हृत्प्रवेशवच्च सर्वतो निवर्तनम्। यथोक्तम्, 'तदपोद्धृते नित्योदितस्थितिः' इति। शक्तेर्विकासः अन्तर्निगूढायाः अक्रममेव सकलकरणचक्रविस्फारणेन 'अन्तर्लक्ष्यो बहिर्दृष्टिर्निमेषोन्मेषवर्जितः' इति।

भैरवीयमुद्रानुप्रवेशयुक्त्या बहिः प्रसरणम्। यथोक्तं कक्ष्यास्तोत्रे—

सर्वाः शक्तीश्चेतसा दर्शनाद्याः स्वे स्वे वेद्ये यौगपद्येन विष्वक्।
क्षिप्त्वा मध्ये हाटकस्तम्भभूतस्तिष्ठन्विश्वाधार एकोऽवभासि॥

इति। श्रीभट्टकल्लटेनापि उक्तम् 'रूपादिषु परिणामात् तत्सिद्धिः'। शक्तेश्च सकोचविकासौ नासापुटस्पन्दनक्रमोन्मिषत्सूक्ष्मप्राणशक्त्या भ्रूभेदनेन क्रमासादितोर्ध्वकुण्डलिनीपदे प्रसरविश्रान्तिदशापरिशीलनम्; अधःकुण्डलिन्यां च षष्ठवक्त्ररूपायां प्रगुणीकृत्य शक्तिं तन्मूल-तदग्र-तन्मध्यभूमिस्पर्शावेशः। यथोक्तं विज्ञानभट्टारके—

'वह्नेर्विषस्य मध्ये तु चित्तं सुखमयं क्षिपेत् ।
केवलं वायुपूर्णं वा स्मरानन्देन युज्यते ॥' इति

अत्र वह्निः अनुप्रवेशक्रमेण संकोचभूः, विषस्थानं प्रसरयुक्त्या विकासपदं, 'विष्लृ व्याप्तौ' इति अर्थानुगमात् ।

'वाहयोः'—वामदक्षिणगतयोः प्राणापानयोः 'छेदो'—हृदयविश्रान्ति-पुरःसरं अन्तः ककारहकारादिप्रायानच्कवर्णोच्चारेण विच्छेदनम् । यथोक्तम् ज्ञानगर्भे—

अनच्ककककृतायतिप्रसृतपार्श्वनाडीद्वय-
च्छिदो विधृतचेतसो हृदयपङ्कजस्योदरे ।
उदेति तव दारितान्धतमसः स विद्य ङ्कुरो
य एष परमेशतां जनयितुं पशोरप्यलम् ॥ इति ।

'आदिकोटिः' हृदयम्, 'अन्तकोटिः' द्वादशान्तः; तयोः प्राणोल्लासविश्रान्त्य-वसरे 'निभालनं'—चित्तनिवेशनेन परिशीलनम् । यथोक्तं विज्ञानभैरवे—

'हृद्याकाशे निलीनाक्षः पद्मसंपुटमध्यगः ।
अनन्यचेताः सुभगे परं सौभाग्यमाप्नुयात् ॥' इति । तथा—

'यथा तथा यत्र तत्र द्वादशान्ते मनः क्षिपेत् ।
प्रतिक्षणं क्षीणवृत्तेर्वैलक्षण्यं दिनैर्भवेत् ॥' इति ।

आदिपदात् उन्मेषदशानिषेवणम् । यथोक्तम्—

'उन्मेषः स तु विज्ञेयः स्वयं तमुपलक्षयेत्' इति स्पन्दे । तथा रमणीय-विषयचर्वणादयश्च संगृहीताः । यथोक्तं विज्ञानभैरवे—

'जग्धिपानकृतोल्लासरसानन्दविजृम्भणात् ।
भावयेद्भरितावस्थां महानन्दमयो भवेत् ॥

गीतादिविषयास्वादासमसौख्यैकतात्मनः ।
योगिनस्तन्मयत्वेन मनोरूढेस्तमात्मता ॥

यत्र यत्र मनस्तुष्टिर्मनस्तत्रैव धारयेत् ।
तत्र तत्र परानन्दस्वरूपं संप्रकाशते ॥' इति ।

एवमन्यदपि आनन्दपूर्णस्वात्मभावनादिकं अनुमन्तव्यम् । इत्येवमादयः अत्र मध्यविकासे उपायाः ॥

(பொ-ள்) இவ்வுபாயம் முதலில் கூறப்படுவதற்குக் காரணம் இது மிக முக்கியமாக இருப்பதும் பிரத்யபிஜ்ஞா சாஸ்திரத்தில் விளக்கப் பட்டிருப்பதுமாகும். சக்தியின் குறுக்கம் முதலானவை பிரத்யபிஜ்ஞா சாஸ்திரத்தில் கூறப்படவில்லையாயினும், ஆகம மரபில் இடம் பெற் றிருப்பதால் இங்கே இடையீடாக விளக்கப்படுகின்றன. பல உபாயங்களையும் எடுத்துக்காட்டினால் எவரேனும் சிலர் ஏதேனும் ஒருபாயத்தைக் கொண்டு 'சமாவேச' நிலையில் புகுதல் கூடும். 'சக்தியின் குறுக்கம்' என்பது பொறிகளின் வழியே வெளியே செல்லும் சைதன்யத்தை உள்முகமாகத் திருப்பி உள்ளார்ந்த சைதன் யத்தோடு ஒன்றச் செய்தல். இக் கருத்து அதர்வவேதத்தைச்(?) சார்ந்த கடோபநிஷத்தின் நான்காவது வல்லியில் கூறப்பட்டுள்ளது.

'சுயம்புவான பரம்பொருள் வெளியே செல்லும் இயல்பினதான இந்திரியங்களுக்கு ஓட்டைகள் அமைத்தது; ஆகவேதான் அவை புறத்தே நோக்குகின்றன, அந்தராத்மாவை நோக்குவதில்லை. எனினும் ஒரு சில மெய்யறிவாளர் உள்ளே உள்ள பரமனை உள்முக மாகப் பார்த்தனர், அமுத நிலையைச் சுவைத்தனர்.' (4-வது வல்லி, முதல் மந்திரம்).

வெளியே பாய்ந்து செல்லும் சக்தி, அச்சமுற்ற காலத்தில் ஆமை தன் அவயவங்களை உள்ளே சுருக்கிக்கொள்வதுபோல, திரும்பி உள்முகமாக ஒன்றுதலைக் குறிப்பதே (சக்திசங்கோசம்).

பிறிதோரிடத்தில், 'அது திரும்பி (உள்முகமாகச்) செல்லும் போது என்றுமுள பரம்பொருளின் நிலையை அடைகிறது' என்று சொல்லப்பட்டுள்ளது.

'சக்தியின் விகாசம்' என்பது உள்ளே மறைந்திருக்கும் சித் சக்தி எல்லா பொறிகளின் வாயிலாகவும் ஒரேயடியாக வெளியே பாய்ந்து செல்வதைக் குறிக்கும்.

'ஒருவன் அடையவேண்டிய குறிக்கோளை (பரம்பொருளை) உள்ளே தான் காணவேண்டும். அப்போது புறக்கண்கள் மூடுதல் திறத்தலின்றி அசையாமல் இருக்கவேண்டும்'—என்று கூறப் பட்டுள்ளது.

இப்பைரவீ முத்திரை அநுப்பிரவேசம் என்னும் யுக்தியால் பொறிகள் வெளியே செல்வதைக் குறிக்கும். இது கக்ஷ்யாஸ் தோத்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

'உமது சக்தியால் காண்டல் முதலான எல்லா சக்திகளையும் அதனதன் புலன்களில் ஒரே சமயத்தில் யாங்கணும் செல்லச்செய்து உள்ளே பொன்னுலாகிய தூண் போல அசைவற்றிருக்கும் நீர் (சிவன்) பிரபஞ்சத்திற்கெல்லாம் ஆதாரமாயுள்ள ஒருவனாக விளங்குகிறீர்'.

பட்டர் கல்லடரும் கூறுகிறார்—'அது (மத்திய சக்தியின் விகாசம்), பரிணாமத்தால் (உள்ளிருக்கும் சக்தியே புறப்பொருள் களில் சென்றடைகிறது என்ற கருத்தால்) உருவம் முதலான வற்றுடன் இயைந்திருப்பினும், சித்திக்கிறது'.

சக்தியின் குறுக்கமும் விரிவும் எத்தகையன எனின், ஊர்த்துவ குண்டலினீ நிலையில் வெளிப்போதலும் உள்ளடங்குதலுமான செயல் முறை; புருவமத்தியில் பிராணசக்தியைப் படிப்படியாகக் கட்டுக்குக் கொண்டுவரவேண்டும். இது மூக்குதுவாரத்தின் வழியே ஓர் ஒழுங்கு முறைபற்றி சூக்குமப் பிராணசக்தியைக் கட்டுப்படுத்து வதைக் குறிக்கும்.

ஆறுவது வாயிலான (மேட்ரகந்தம் என்னுமிடத்திலுள்ள) கீழ் நிலைக் குண்டலினியில் வலுப்படுத்தப்பட்ட பிராணசக்தி அதனடி யிலும் நுனியிலும் மத்தியிலும் ஊடுருவுகிறது. இது விஞ்ஞான பட்டாரகம் எனும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

'சுகமயமான சித்தத்தை 'வன்னிக்கும்' (கீழ்நிலைக் குண்டலி னிக்கும்) 'விஷத்திற்கும்' (மேல்நிலைக் குண்டலினிக்கும்) இடையே யோகநெறியில் இயல்பாகவே நிறுத்தினாலும் பிராணவாயுவின் துணைகொண்டு நிறுத்தினாலும் ஒருவன் பேரானந்தத்தைப் பெற முடியும்'.

இங்கே 'வன்னி' என்பது சக்தியின் குறுக்கத்தையும், 'விஷம்' என்பது சக்தியின் விரிவையும் குறிக்கும். 'விஷ்' என்ற முதனிலை (தாதுப்பகுதி) 'வியாபித்தல்' என்னும் பொருள் தரும். ஆகவே 'பிரசரம்' எனப்படும் யோக நெறியால் சக்தி 'விகசிப்பதை' இது குறிக்கிறது.

'இரு வாஹங்கள்' என்று சூத்திரத்தில் குறிப்பிடப்படுவது பிராணவாயுவையும் அபான வாயுவையும் குறிக்கும்; முன்னையது இடநாடியையும் பின்னையது வலநாடியையும் சார்ந்தது. 'சேதம்' என்று குறிப்பிடப்பட்டது உயிரொலியின்றி க், ஹ் முதலாய மெய் யொலிகளையே பெரும்பாலும் கொண்ட ஒலிகளால் பிராணுபான வாயுக்களுக்கு ஏற்படும் தடை. இதற்கு முன்னதாக இதயத்திலேயே இவை கட்டுப்படுத்தப்படவேண்டியவை. இது 'ஞானகனத்தில்' சொல்லப்பட்டுள்ளது.

'உயிரொலிகளற்ற 'க்' முதலான மெய்யொலிகளால் இருபுறங் களிலும் நீண்டு செல்லும் இடது வலது நாடிகளைக் கட்டுப்படுத்தி இதயத்தாமரையின் மத்தியிலுள்ள மனம் அடங்கிய நிலையில் அஞ்ஞான இருள் அகற்றப்படுகிறது; மெய்ஞ்ஞானம் முகிழ்க்கிறது. ஓ தாயே, பசுவாகிற சீவனிடத்தில் பரமேசன் தன்மையைத் தோற்றுவிக்கும் சக்தி வாய்ந்தது இவ்வுபாயம்.'

சூத்திரத்தில் உள்ள 'ஆதிகோடி' என்ற சொல் இதயத்தையும் 'அந்தகோடி' என்ற சொல் த்வாதசாந்தத்தையும் குறிப்பன. 'நிபாலனம்' என்ற சொல் பிராணவாயுவின் எழுச்சி ஒடுக்கம் ஆகியவை நிகழுங்காலத்து சித்தத்தை நிலைபெறச் செய்வதற்கான பயிற்சியைக் குறிக்கும்.

இதுபற்றி விஞ்ஞான பைரவம் கூறுவதாவது—

'எவன் ஒருவனுடைய இதயாகாசத்தில் இந்திரியங்கள் ஒடுங்கு கின்றனவோ, இதயத்தாமரையின் மத்தியில் மனத்தைச் செலுத்தி எவன் எதனையும் எண்ணுமல் இருக்கிருனே, ஓ சௌபாக்யவதியே, அவனே மேலான இன்பத்தைப் பெறுவான்' (சு.49). மேலும்,

'எவ்வகையாயினும் எவ்விடத்தேயாயினும் எவனொருவன் த்வாதசாந்தத்தில் மனத்தைச் செலுத்துகின்றானோ அவனுடைய மனோவிருத்தி கணந்தோறும் குறைந்து கொண்டே வரும்; சில நாட் களில் மாறுபட்ட மேலான நிலையை அடைவான்'.

சூத்திரத்தில் 'ஆதி' (முதலியன) என்ற சொல் 'உன்மேஷ நிலைப்'பயிற்சியைக் குறிக்கும். இது பற்றி ஸ்பந்தகாரிகை (நி. 3, காரி. 9) கூறுகிறது—

'இதுவே உன்மேஷம். இதை அவரவர் அனுபவத்தில் காணலாம்'.

இன்பம் தரும் பிற பொருள்களை அனுபவித்தல் முதலானவையும் இதனுள் அடங்கும். இது பற்றி விஞ்ஞானபைரவத்தில் கூறப் படுவதாவது —

'உண்ணுதல், பருகுதல் ஆகியவற்றால் விளையும் இன்பம் பேரானந்தமாக அனுபவ விஷயமாகும்போது, அப்பூரண ஆனந்தத்தில் முழு பாவனையையும் ஈடுபடுத்தினால் மகானந்தமய மாகவே ஆகிவிடலாம்.

'பாடல் முதலானவற்றை அனுபவித்து ஈடற்ற சுகத்தை ஒரு யோகி உணரத் தலைப்பட்டால், அத்தகைய யோகிக்கு அதோடு ஒன்றும் நிலை ஏற்பட்டு அதுவாகவே ஆகிவிடுகிறான்.

'எங்கெங்கே உள்ளத்திற்கு மிகுந்த திருப்தி ஏற்படுகிறதோ உள்ளம் அப்பொருளில் ஊன்றி நிற்கிறது. அந்நிலையில் பேரானந்த சொரூபம் வெளிப்படுகிறது'.

இது போன்றே ஆனந்தம் நிரம்பியதான பரமானந்தானுபவம் பிறவாற்றானும் உய்த்துணரத்தக்கது. இவையனைத்தும் இங்கே 'மத்ய விகாசத்தின்' உபாயங்கள் என்று கொள்ளத்தக்கன.

(வி-ம்) 'கடோபநிஷதம்' கிருஷ்ணயஜுர்வேதத்தைச் சார்ந்ததாகக் கருதப்படுவது. ஆசிரியர் கூற்றுக்கு ஆதாரம் விளங்கவில்லை.

'ஊர்த்வ குண்டலினீ' என்பது பிராணவாயுவும் அபானவாயுவும் சுழுமுனை வழியாக மேலே செல்லும் நிலையைக் குறிக்கும். இது இயல்பாக மூலாதாரத்தில் சுருண்டு கிடப்பது. இதை 'விகாசம்' என்றும் 'விஷம்' என்றும் கூறுவர். 'விகாசம்' என்பது விரிவடைதல் என்றும் 'விஷம்' என்பது வியாபித்தல் என்றும் பொருள்படும்.

'அதஃ குண்டலினீ' நிலையில் பிராணவாயு மூலாதாரத்தை நோக்கிச் செல்லும்.

'ஷ்ஷ்டவக்த்ரம்' எனப்படுவது காது, கண், மூக்கு, வாய், எருவாய் கருவாய் என்பவற்றுள் ஆறுவது. இதை 'மேட்ரகந்தம்' எனவும் கூறுவர். 'வன்னி' (அத:குண்டலினீ) சங்கோசம் எனவும் படும். இது பிராணவாயுவோடு தொடர்புடையது. கீழ்நிலைக்குண்டலினியின் மையப்பகுதியின் கீழ்ப்பாதியும் கீழ்ப்பகுதியும் பிராணவாயுவால் ஆக்கிரமிக்கப்படும்போது 'சங்கோசம்' எனப்படுகிறது. மையப் பகுதியின் மேற்பாதியும் மேற்பகுதியும் ஆக்கிரமிக்கப்படும்போது 'விஷம்' எனப்படுகிறது. சித்தம் இவை இரண்டிற்குமிடையே நிறுத்தப்படவேண்டும் என்பது இங்கே கூறப்படும் கருத்து. சித்தமும் வாயுவும் நெருங்கிய தொடர்புடையவை. சித்தத்தை வாயுவின் சஞ்சாரத்தால் கட்டுப்படுத்தலாம். அப்படிக் குறிப்பிட்ட ஒரு நிலையில் சித்தம் வைக்கப்பட்டால் பேரானந்தம் கிட்டும்.

'மத்ய விகாசம்' என்பது இடை பிங்கலை என்ற இரண்டு நாடிகளுக்கு மத்தியில் உள்ள சுழுமுனையில் பிராணவாயு சஞ்சரிக்கும்போது ஏற்படும் ஒரு மாற்றத்தைக் குறிக்கும்.

'சங்கோசம்' என்பது பொறிகள் வாயிலாக மனம் புறப்பொருள்களை நோக்கித் தொழிற்படும்போது அந்நோக்கை உள்முகமாகத் திருப்பு வதைக் குறிக்கும். இதை 'விசிராந்தி என்றும் கூறுவர்'.

'விகாசம்' என்பது பொறிகள் பொருள்களை நோக்கிச் சென்றாலும் மனம் புறத்தே செல்லவொட்டாமல் ஆத்ம சைதன்யத்தோடு ஒன்றவைத்தல். இதைப் 'பிரசரம்' என்றும் கூறுவர்.

'பிரசரவிசிராந்தி' என்பது யோகி பிராணசக்தியை சுழுமுனையில் தேக்கி இரு புருவங்களுக்கிடையே நிறுத்தும்போது ஏற்படும் நிலை. இதுவே ஊர்த்வ குண்டலினீ நிலையுமாகும். இதுவே கீழ்நிலைக் குண்டலினியில் பயிலப்படும்போது உன்மீலன சமாதி எனப்படும்.

'உன்மேஷம்' எனப்படுவது உள்ளத்தில் எழுகின்ற ஓரெண்ணத் திற்கும் மற்றோரெண்ணத்திற்கும் இடைப்பட்ட நேரத்தில் உள்ளம் சாந்த நிலையில் இருப்பதைக் குறிக்கும். இதை அனுபவத்தில் காண வேண்டும். உள்ளம் அப்போது 'ஸ்பந்தத்தோடு' அல்லது சைதன்யத் தோடு ஒன்றியிருக்கும். இது சாக்தோபாயத்தின்படியான விளக்கம். சாம்பவோபாயத்தின்படி 'உன்மேஷம்' என்பது யோகநெறியில் பரம் பொருள் பற்றிய 'பாரமார்த்திக பாவத்தைக்' குறிக்கும்.

விஞ்ஞான பைரவத்தில் கூறப்பட்டுள்ள மூன்று முறைகளும் ரச தாரணை, சப்த தாரணை, மனோசங்கல்ப தாரணை எனப்படும்.

मध्यविकासाच्चिदानन्दलाभः, स एव च परमयोगिनः समावेशसमापत्त्यादि पर्यायः समाधिः, तस्य नित्योदितत्वे युक्तिमाह —

समाधिसंस्कारवति व्युत्थाने भूयोभूयश्चिदैक्यामर्शान्नित्योदितसमाधिलाभः ॥ १९ ॥

आसादितसमावेशो योगिवरो व्युत्थाने अपि समाधिरससंस्कारेण क्षीब इव सानन्दं घूर्णमानो, भावराशिं शरदभ्रलवम् इव चिद्गगन एव लीयमानं पश्यन्, भूयो भूयः अन्तर्मुखतां एव समवलम्बमानो, निमीलनसमाधिक्रमेण चिदैक्यमेव विमृशन् व्युत्थानाभिमतावसरे अपि समाध्येकरस एव भवति । यथोक्तं क्रमसूत्रेषु—

"क्रममुद्रया अन्तःस्वरूपया बहिर्मुखः समाविष्टो भवति साधकः । तत्रादौ बाह्यात् अन्तःप्रवेशः, आभ्यन्तरात् बाह्यस्वरूपे प्रवेशः आवेशवशात् जायते इति सबाह्याभ्यन्तरोऽयं मुद्राक्रमः" इति । अत्रायमर्थः—सृष्टि-स्थिति-संहृतिसंविच्चक्रात्मकं क्रमं मुद्रयति, स्वाधिष्ठितं आत्मसात्करोति येयं तुरीया चितिशक्तिः, तया 'क्रममुद्रया;' 'अन्तरिति'—पूर्णाहन्तास्वरूपया; 'बहिर्मुख' इति विषयेषु व्यापृतः अपि; 'समाविष्टः'—साक्षात्कृतपरशक्तिस्फारः 'साधकः' परमयोगी भवति । तत्र च 'बाह्याद्' ग्रस्यमानात् विषयग्रामात् 'अन्तः' परस्यां चिति भूमौ, ग्रसनक्रमेणैव 'प्रवेशः' समावेशो भवति । 'आभ्यन्तरात्' चितिशक्तिस्वरूपात् च साक्षात्कृतात् 'आवेशवशात्' समावेशसामर्थ्यात् एव 'बाह्यस्वरूपे' इदन्तानिर्भासे विषयग्रामे, वमनयुक्त्या 'प्रवेशः' चिद्रसाश्यानताप्रथनात्मा समावेशो जायते' इति 'सबाह्याभ्यन्तरः अयं' नित्योदितसमावेशात्मा, 'मुदो' हर्षस्य वितरणात्, परमानन्दस्वरूपत्वात्, पाशद्रावणात्, विश्वस्य अन्तः तुरीयसत्तायां मुद्रणात् च मुद्रात्मा, क्रमः अपि सृष्ट्यादिक्रमाभासकत्वात् तत्क्रमाभासरूपत्वात् च 'क्रम' इति अभिधीयते इति ॥

(பொ-ள்) மத்திய விகாசத்தினால் சிதானந்தம் பெறப்படுகிறது; அதுவே 'சமாவேசம்' என்றும் 'சமாபத்தி' என்றும் கூறப்படும் பரமயோகிகள் அடையும் சமாதி நிலை. இந்நிலை பின்னர் நிலைத்திருப்பதற்கு கீழ்க்கண்ட முறை சொல்லப்படுகிறது.

[சூ.19] சமாதி நிலைக்குப் பின்விளைவான சம்ஸ்காரத்தையுடைய 'வியுத்தானம்' ஏற்பட்ட பின்னர், மீண்டும் மீண்டும் 'சைதன்யமும் நானும் ஒன்றே' என்று எண்ணிக்கொண்டே வந்தால் என்றும் நிலை பேறுடையதாகிய சமாதியை எய்தலாம்.

சமாவேசம் கைவரப்பெற்ற முதிர்ந்த யோகி, வியுத்தான நிலையிலும் சமாதியானந்த சம்ஸ்காரத்தினுல் மதுவுண்டவனைப்போல் ஆனந்தத்தில் திளைக்கிருர்; விரிந்து கிடக்கும் பிரபஞ்சப்பொருள்கள், பனிக்கால வானத்தில் சிறுமேகம் சிதறுண்டு மறைவதுபோல, சிதாகாசத்தில் மறைந்து போவதைக் காண்கிருர்; மீண்டும் மீண்டும் உள்முக யோகநிலையிலிருப்பவராய், தன்னையே நோக்கும் சமாதி நிலையில் தொடர்ந்திருப்பவராய், சைதன்யத்தோடு தன் ஐக்கியத்தையே எண்ணுபவராய் சமாதிநிலை ஒன்றிலேயே இன்பம் காண்பவராகிவிடுகிருர். இது கிரம சூத்திரங்களில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

'இந்த சாதகர் உள்ளார்ந்த சித்சொரூபமாயிருக்கிற 'கிரம முத்திரையை' மேற்கொண்டு புறத்தே பார்ப்பவராயினும் சமாவேச முற்றவராகிருர். இதில் முதலில் புறத்தேயிருந்து உள்ளும், பின்னர் உள்ளிருந்து புறத்தே காணப்படும் சொரூபத்திலும் 'ஆவேச' வசத்தினுல் பிரவேசம் எற்படுகின்றது. இவ்வகையில் இம் முத்திரைக்கிரமம் புறத்தேயும் உள்ளேயும் நிகழ்கின்றது'.

இதன் பொருளாவது: 'கிரமம் என்பது படைத்தல் நிலை பெறுத்தல் ஒடுக்கம் என்ற சைதன்ய சக்கரம்; சைதன்யத்தின் நான்காவது சக்தி (துரீயம்) தன்னுலே அதிட்டிக்கப்பட்டிருக்கிற பிரபஞ்சத்தைத் தன்னேடு ஐக்கியப்படுத்திக்கொள்கிறது. 'அந்தர்' என்னும் சொல் பூர்ணகந்தை சொரூபத்தைக் குறிக்கும்; 'பகிர்முகம்' என்பதும் 'புறவிஷயங்களில் ஈடுபட்டிருக்கின்ற போதும்' என்னும் பொருளது; 'சமாவேசமுற்றவர்' என்பது பரமான சக்தியின் மலர்ச்சியை (புறப் பொருளில் ஈடுபட்டிருந்த காலத்திலும்) தாமே உணர்ந்தவரைக் குறிக்கும். 'புறத்தேயிருந்து' என்பதால் புறப்பொருட் கூட்டம் தனதாக்கப்படுதலையும், 'உள்ளிருந்து' என்பதால் பரமான சைதன்ய ஆதாரத்தையும் உணர்த்துவதாகக் கொள்க. தனதாக்கிக்கொள்கின்ற முறைமையினுலே பிரவேசம் அல்லது சமாவேசம் ஏற்படுகிறது. சைதன்ய சக்தி சொரூபம் உணரப்படடவிடத்து சமாவேச முறையினுல் பிரபஞ்சப்பொருள் 'இது' வெனத் தோன்றவும், அகம் புறமாக

வெளியாகும் போது அதாவது சைதன்யரசமே பருப் பொருள்களாக விரியும் போது, சமாவேசம் ஏற்படுகிறது. ஆகவே 'உள்ளும் புறமுமாகிக்கொண்டிருக்கிற ஒன்றே' என்றும் நிகழ்ந்து கொண்டிருக்கிற சமாவேச இயல்பினதாகும். ஆனந்தத்தைக் (மோதம்) கொடுப்பதாலும் (ராதி), பரமானந்த சொரூபமாய் (மோதம்) இருப்பதாலும், பாசத்தை முன் ஓட்டுவதாலும் (த்ரு), பிரபஞ்சத்தை துரீயப் பொருளில் ஒடுக்குவதாலும் (முத்திரையிடுதல்), சைதன்யம் 'முத்திரை சொரூபம்' எனப்படுகிறது. 'கிரமம்' எனப்படுவது சிருட்டி முதலானவை தொடர்ந்து நிகழ்வதாகிற தோற்றம் ஏற்படுவதையே குறிக்கிறது.

(வி-ம்) 'சமாவேசம்' என்பது உயிர் தன் அணுபோன்ற குறுகிய தன்மையை விடுத்து சக்தி சொரூபனுன சிவத்தோடு ஒன்றுதல். 'நிமீலன சமாதி' என்பது கண்களை மூடி உள்முகயோகத்தில் நின்று சீவசைதன்யத்தை சிவசைதன்யத்தில் கரைத்து விடுதல். இதுவே 'பூர்ணுகந்தை' நிலை.

इदानीं अस्य समाधिलाभस्य फलमाह—

तदा प्रकाशानन्दसारमहामन्त्रवीर्यात्मकपूर्णाहन्तावेशात्सदा सर्वसर्गसंहारकारिनिजसंविद्देवताचक्रेश्वरताप्राप्तिर्भवतीति शिवम् ॥ २० ॥

नित्योदिते समाधौ लब्धे सति, प्रकाशानन्दसारा' चिदाह्लादैकघना 'महती मन्त्रवीर्यात्मिका' सर्वमन्त्रजीवितभूता 'पूर्णा' परभट्टारिकारूपा या इयं 'अहन्ता' अकृत्रिमः स्वात्मचमत्कारः तत्र 'आवेशात्' 'सदा' कालाग्न्यादेः चरमकलापर्यन्तस्य विश्वस्य यौ 'सर्गसंहारौ' विचित्रौ सृष्टिप्रलयौ 'तत्कारि' यत् 'निजं संविद्देवताचक्रं' 'तदैश्वर्यस्य' 'प्राप्तिः' आसादनं 'भवति' प्राकरणिकस्य परमयोगिन इत्यर्थः ; 'इति' एतत् सर्वं शिवस्वरूपमेव इति उपसंहारः—इति संगतिः । तत्र यावत् इदं किञ्चिद् संवेद्यते, तस्य संवेदनमेव स्वरूपम् । तस्यापि अन्तर्मुख विमर्शमयाः प्रमातारः तत्त्वम् । तेषामपि विगलितदेहाद्युपाधिसंकोचाभिमाना अशेषशरीरा सदाशिवेश्वरतैव सारम् । अस्या अपि प्रकाशैकसद्भावापादिताशेषविश्वचमत्कारमयः श्रीमान् महेश्वर एव परमार्थः । न हि पारमार्थिकप्रकाशावेशं विना कस्यापि प्रकाशमानता घटते । स च परमेश्वरः स्वातन्त्र्यसारत्वात् आदिक्षान्तमायीयशब्दराशिपरामर्शमयत्वेनैव एतत्स्वीकृतसमस्त-

वाच्यवाचकमयाशेषजगदानन्दसद्भावापादनात् परं परिपूर्णत्वात् सर्वाकाङ्क्षाशून्यतया आनन्दप्रसरनिर्भरः । अत एव अनुत्तराकुलस्वरूपात् अकारात् आरभ्य शक्तिस्फाररूपहकलापर्यन्तं यत् विश्वं प्रसृतं, क्षकारस्य प्रसरशमनरूपत्वात् । तत् अकारहकाराभ्यामेव संपुटीकारयुक्त्या प्रत्याहारन्यायेन अन्तः स्वीकृतं सत् अविभागवेदनात्मकबिन्दुरूपतया स्फुरितम् अनुत्तर एव विश्राम्यति इति शब्दराशिस्वरूप एव अयं अकृतको विमर्शः । यथोक्तम्—

प्रकाशस्यात्मविश्रान्तिरहंभावो हि कीर्तितः ।
उक्ता च सैव विश्रान्तिः सर्वापेक्षानिरोधतः ॥
स्वातन्त्र्यमथ कर्तृत्वं मुख्यमीश्वरतापि च । इति ।

(பொ-ள்) இனி இப்படி சமாதியடைந்ததன் பயன் என்ன என்பதைக் கூறுகிறது அடுத்த சூத்திரம்.

[சூ.20] கிரமமுத்திரையை அடைந்த நிலையில் சிதானந்த மயமாயும் மகாமந்திரசக்தி சொரூபமாயும் இருக்கின்ற பரிபூர்ண அகந்தையில் ஆவேசமுற்றிருக்கும்போது தனதேயாகிய சைதன்ய தேவதைக் கூட்டத்தின் தலைமை ஏற்று எல்லா தோற்ற ஒடுக்கங் களையும் எப்போதும் புரியும் ஆற்றல் பெற்றவனாகிறான். இவை யனைத்துமே சிவசொரூபமாகும்.

நிலையான சமாதியடைந்த பின்னர் அப்பரமயோகிக்கு சைதன்ய தேவதைக் கூட்டத்திற்குத் தலைவனாகும் தகுதி கிடைக்கிறது. இத்தேவதைகள் என்றும் காலாக்னி தொடங்கி (சாந்த) கலை ஈறான பிரபஞ்சத்தின் தோற்றம் ஒடுக்கம் ஆகியவற்றைச் செய்து வருகின்றன. அப்பரமயோகிக்கு இத்தகைய தகுதி கிடைப்பதற்குக் காரணம் பிரகாசம் (சைதன்யம்) ஆனந்தம் ஆகியவற்றையே சாரமாகவும், எல்லா மந்திரங்களுக்கும் உயிர்ப்பாகவும், பூரண மானதாகவும், அதாவது மேலான விமர்சமயமானதுமான எந்த ஒரு இயல்பான ஆத்மானந்தம் உளதோ அதில் ஆவேசிப்பதே யாகும். இவையனைத்துமே சிவசொரூபம்தான் என்று கூறி இறுதி சூத்திரத்தை ஆசிரியர் முடிக்கிறார்.

இது இவ்வாருக, எந்த ஒரு பொருள் அறியப்படுகின்ற (பிரமேயம்) ஒன்ருக இருக்கிறதோ, அதன் உண்மை சொரூபம் 'சம்வேதனம்' (பிரமாணம்) எனப்படும். இச்சம்வேதனத்திற்கும் உள்ளீடான உண்மை உள்முகமாக விமர்சம் செய்வோரான (தன்னுணர்வு பெற்றோரான) அறிவோர்களே (பிரமாதாக்கள்) ஆவர். இப்பிரமாதாக்களுள்ளேயும் உடல்முதலான உபாதிகளால் ஏற்படும் அபிமானம் கரைந்து பிரபஞ்சத்தையே உடலாகக் கருதும் யோகியரின் சொரூபம் சதாசிவ ஈசுவரரின் நிலையாகும். இந் நிலையைக் காட்டிலும் மேலான நிலை (பிரபஞ்சத் தோற்றத்திற்கடிப் படையாக உள்ள) பிரகாசத்தோடு ஒன்றி (சிதானந்தமாகிற) பிரபஞ்ச முழுமையும் தானே என்றெண்ணும் சமத்காரம் (விமர்சம்) நிரம்பிய மகேசுவரனுகிற பரம்பொருளாகும்.

பரம் பொருளான பிரகாசத்தின் ஆவேசம் இல்லாது எவருக்கும் பிரகாசமாகின்ற நிலை பொருந்தாது. அப்பரமேசுவரன் சுதந்திரன்; அகாரம் முதல் க்ஷகாரம் ஈருக உள்ள மாயேயத்திற்கப்பாற்பட்ட ஒலிக்கூட்டங்களை பராமரிசிக்கின்ற இயல்பினன்; ஆதலால் இவனுக்கு அடக்கமான அனைத்து வாச்சியமான பொருள்கள், வாசகமான சொற்கள் ஆகியவற்ருலாய பிரபஞ்சத்தை ஆனந்த மயமானதாய் ஆக்குகின்றவன்; பரிபூரணன்; எதுபற்றியும் வேண்டுதல் இல்லாதவன்; ஆனந்தப் பெருக்கால் நிறைந்தவன். ஆகவே இப்பிரபஞ்சம் தம்மின் மிக்கார் இல்லாத அகரமாகிற சிவ (அகுல) சொரூபம் தொடங்கி சக்தியின் பரப்பில் இறுதியான ஹகாரமாகிற கலை முடிய உள்ள இச்சப்த பிரபஞ்சத்தால் வியாபித்துள்ளது—'க்ஷ' என்ற ஒலி இவ்வியாபகத்தின் எல்லைக் கோட்டைக் குறிக்கும் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது—(பாணினியின்) குறியீட்டு முறையை (பிரத்யாஹாரம்) ஒட்டிக் காண்போமேயானுல் அகார ஹகாரங்களை இணைப்பதன் மூலம் ஒலிகளனைத்தையும் தனதாக்கிக் கொண்டு வேறுபாட்டுணர்வுக் கிடமளிக்காத பிந்து உருவத்தில் பிரகாசிப்பதாய் (அநுத்தரம்= மிக்கோனல்லாத) பரம் பொருளில் பிரபஞ்சம் ஒடுங்குகிறது. ஆகவே உள்ளார்ந்த இந்த இயல்பான விமர்சம் ஒலிக்கூட்ட சொரூபமானது.

இது (உத்பலதேவரால் அஜடபிரமாத்ரு சித்தியில்) கூறப் பட்டுள்ளது. 'நான் எனும் உணர்வு, (இதுகுடம், நான் சுகி என்பவை போன்ற) அனுபவங்கள் தன்னகத்தே விசிராந்தி அடைகின்ற ஒன்ருகும். இவ்விசிராந்தி பிற ஒன்றை அபேட்சித்திருப்

பதில்லே யாகையால், சுதந்திரத்தன்மை எனவும் முக்கியகர்த்ருத்வம் எனவும், ஈசுவரனின் தன்மை எனவும் கூறப்படுகிறது. (22, 23)

(வி-ம்) 'தேவதைக் கூட்டம்' (சம்வித் தேவதாசக்ரம்) எனப்படுவது அண்டத்தை நோக்க முன்னர் கூறப்பட்டுள்ள கேசரீசக்ரம், கோசரீசக்ரம், திக்சரீசக்ரம், பூசரீசக்ரம் எனப்படுபவை. பிண்டத்தை நோக்க உள்ளும் புறமுமான கரணங்களைக் (அந்தக்கரணம், மெய், வாய் முதலியன) குறிக்கும்.

'கலைகள்': அபிநவகுப்தரால் குறிப்பிடப்பட்டுள்ள கலைகள் நிவிருத்தி கலை, பிரதிஷ்டாகலை, வித்யாகலை, சாந்தாகலை, சாந்தாதீதாகலை என்பன. இப்பெயர்கள் சைவசித்தாந்தத்திலும் ஆளப்படுகின்றன.

'விமர்சம்' என்பது பரம், அபரம், பராபரம் என மூவகைத்து; சிவத்தில் இது அபேதமாகவும், சீவனில் பேதமாகவும் சக்தியில் பேதாபேதமாகவும் காணப்படுவது.

'சமத்காரம்' எனப்படுவது 'அஹம்விமர்சம்.' அதுவே 'சிதானந்தம்' எனவும் படும். 'இப்பிரபஞ்சமனைத்தும் நானே' என்று எண்ணும் நிலை. பரம்பொருளின் பிரகாசத்தைக் குறிப்பது இது. பிரபஞ்சம் தோன்றிய நிலையில் சைதன்யம் பிரகாசமாயும், ஒடுங்கிய நிலையில் விமர்சமாயும் இருப்பதால் பரம்பொருளை 'பிரகாச-விமர்சமய மானவன்' என்று கூறுகிறோம்.

'ஜகதானந்தம்' என்பது சைதன்யம் பிரபஞ்சமாகத் தோன்றுவதைக் குறிக்கும். அருவமான பரம்பொருள் பிரபஞ்சமெனும் பருப் பொளாய்த்தோன்றுவதே இது. ஆனந்த சொரூபனான பரம்பொருள் ஜகத்தாக (பிரபஞ்சமாக)த் தோன்றி அதை ஆனந்தமயமாக ஆக்குவதால் இப்பெயர் பெற்றது.

'வாசக-வாச்யம்: ஆகமக் கூற்றின்படி இப்பிரபஞ்சத்திலுள்ள பொருள்களெல்லாம் 'பராசக்தியால் ஆக்கப்பட்டவையே. அப் பொருள்களைக் குறிக்கும் சொற்களெல்லாம் 'பராவாக்கின்' ஆக்கங் களே. வாசகமாகிற சொல்லுக்கு வாச்சியமாகிற பொருளைத் தரும்

சக்தி உண்டு. ஆகவே மந்திரங்கள் சக்தியோடு தொடர்புடையன. மாந்தர்களால் இன்ன சொல்லுக்கு இன்ன பொருள் என்று மரபு பற்றிக்கூறப்படும் சொற்கள் மாயைக்குட்பட்ட சொற்கள். தெய்வீகச் சொற்கள் மாயைக்கப்பாற்பட்டவை.

'அகுலம்': ஸ்வச்சந்த தந்திரத்தில் 'குலம்' சக்தியையும் 'அகுலம், (குலமல்லாதது) சிவனையும் குறிக்கும் என்று கூறப்பட்டுள்ளது. 'குலம்' என்ற சொல் பொதுவழக்கில் ஒரு குழுவைக் குறிக்கும். இங்கே தோற்றுவிக்கப்படுகின்ற பிரபஞ்சக்கூட்டத்தைக் குறிக்கின்றது. இத்தோற்றத்தோடு தொடர்புடையது 'சக்தி'. தோற்ற மாற்றங்களில் உட்படாதது என்பதால் சிவன் 'அகுலம், என்று சொல்லப்படுகிறான்.

'பிரத்யாஹாரம்' பாணினியின் இலக்கணத்தில் எழுத்துக்கள் பற்றிய சுருக்கக் குறியீட்டைக் குறிக்கும். 'அச்' என்றால் அஇஉண், ருலுக், ஏஓங், ஐஔச்' என்ற நான்கு மாகேசுவர சூத்திரங்களில் அடங்கிய அகரம் முதல் ஔகாரம் ஈறாக உள்ள உயிரெழுத்துக்களைக் குறிக்கும். 'அஹ' என்றால் முதல் சூத்திரத்திலுள்ள அகரம் முதல் இறுதி சூத்திரத்திலுள்ள ஹகாரம் ஈறாக உள்ள உயிரெழுத்துக்கள் மெய்யெழுத்துக்கள் அனைத்தையும் குறிக்கும். இவைபோல் பிற. இங்கே 'அஹ' என்பது 'அஹம்' (நான்) என்பதைக் குறிக்கிறது. இந்த 'அஹம்' வேறுபாடற்ற பரம்பொருளையும் குறிக்கும். 'அஹ' என்பது பல்வேறு வகையான எல்லா எழுத்துக்களையும் குறிப்பதால் பல்வேறுபட்ட பிரபஞ்சத்தையும் குறிக்கும். இருவகையானும் 'அஹம்' என்பது ஒன்றேயாதல் போல சிவனும் பிரபஞ்சமும் ஒன்றே என்பதை இது உணர்த்தும். 'பிந்து' என்பது ஒரு நுண்ணிய திண்ணிய உருக்கொண்ட சக்தி. இதுவே பல்வேறுபட்ட பிரபஞ்சமாக விரிகிறது. ஆனால் இதில் எவ்வித வேற்றுமையையும் காணவியலாது. இதைச் 'சித்கனம்' என்பர். ஆகவேதான் இதற்குப் புள்ளி உருவம் கொடுக்கப்பட்டுள்ளது. அஹ் என்பதில் 'ஹ' என்ற எழுத்தின் மேலுள்ள புள்ளி 'பிந்துவை'க் குறிக்கிறது. 'அ' என்ற சிவத்தோடும் 'ஹ' என்ற சக்தியோடும் பிந்து தொடர்பு கொண்டிருப்பதை இதில் காண்கிறோம். சிவன் சக்தியோடு கூடி பிரபஞ்சத்தைத் தோற்றுவித்த போதும் பேதமின்றி இருக்கிறான் இதைத்தான் ஆசிரியர் 'அவிபாக-வேதனாத்மக-பிந்து-ரூபதயா' என்று குறிப்பிடுகிறார்.

एषैव च अहन्ता सर्वमन्त्राणां उदयविश्रान्तिस्थानत्वात् एतद्बलेनैव च तदत्तदर्थक्रियाकारित्वात् महती वीर्यभूमिः । तदुक्तम्—

'तदाक्रम्य बलं मन्त्रा............ ।' इत्यादि
......................... त एते शिवधर्मिणः ॥ इत्यन्तं

श्रीस्पन्दे । शिवसूत्रेषु अपि—

'महाह्रदानुसंधानान्मन्त्रवीर्यानुभवः (2. उ. 22 सू.) इति ।

तदत्र महामन्त्रवीर्यात्मिकायां पूर्णाहन्तायां 'आवेशो' देहप्राणादिनिमज्जनात् तत्पदावाप्त्यवष्टम्भेन देहादीनां नीलादीनामपि तद्रसाप्लावनेन तन्मयीकरणम् । तथा हि—देहसुखनीलादि यत् किञ्चित् प्रथते, अध्यवसीयते, स्मर्यते, संकल्प्यते, वा, तत्र सर्वत्रैव भगवती चितिशक्तिमयी प्रथा भित्तिभूतैव स्फुरति, तदस्फुरणे कस्यापि अस्फुरणात् इति उक्तत्वात् । केवलं तथा स्फुरन्त्यपि सा तन्मायाशक्त्या अवभासितदेहनीलाद्युपरागदत्ताभिमानवशात् भिन्नभिन्नस्वभावा इव भान्ती ज्ञानसंकल्पाध्यवसायादिरूपतया मायाप्रमातृभिः अभिमन्यते । वस्तुतस्तु एकैव असौ चितिशक्तिः । यथोक्तम्—

'या चैषा प्रतिभा तत्तत्पदार्थक्रमरूषिता ।
अक्रमानन्तचिद्रूपः प्रमाता स महेश्वरः ॥ इति । तथा—
मायाशक्त्या विभोः सैव भिन्नसंवेद्यगोचरा ।
कथिता ज्ञानसंकल्पाध्यवसायादिनामभिः ॥' इति ।

एवं एषा सर्वदशासु एकैव चितिशक्तिः विजृम्भमाणा यदि तदनुप्रवेशतदवष्टम्भयुक्त्या करणोन्मीलननिमीलनक्रमेण सर्वस्य सर्वमयत्वात् तत्तत्संहारादौ अपि 'सदा सर्वसर्गसंहारकारि' यत् 'सहजसंवित्तिदेवताचक्रम्' अमायीयान्तर्बहिष्करणमरीचिपुञ्जः, तत्र 'ईश्वरता'—साम्राज्यं परभैरवात्मता, तत्प्राप्तिः भवति परमयोगिनः । यथोक्तम्—

'यदा त्वेकत्र संरूढस्तदा तस्य लयोद्भवौ ।
नियच्छन्भोक्तृतामेति ततश्चक्रेश्वरो भवेत् ॥' इति ।

अत्र एकत्र इति—'एकत्रारोपयेत्सर्वम् ....... ।' इति । चित्सामान्यस्पन्दभूः उन्मेषात्मा व्याख्यातव्या । तस्य इति अनेन—

'पुर्यष्टकेन संरुद्ध .... .... ।' इति उपक्रान्तं पुर्यष्टकम् एव परामृष्टव्यम्; न तु यथा विवरणकृतः 'एकत्र सूक्ष्मे स्थूले शरीरे वा' इति व्याकृतवन्तः । स्तुतं च मया—

स्वतन्त्रश्चितिचक्राणां चक्रवर्ती महेश्वरः ।
संवित्तिदेवताचक्रजुष्टः कोऽपि जयत्यसौ ॥ इति ।

इतिशब्द उपसंहारे, यत् एतावत् उक्तप्रकरणशरीरं तत् सर्वं 'शिवम्' शिवप्राप्तिहेतुत्वात्, शिवात् प्रसृतत्वात्, शिवस्वरूपाभिन्नत्वात् च शिवमयमेव इति शिवम् ॥

देहप्राणसुखादिभिः प्रतिकलं संरुध्यमानो जनः
पूर्णानन्दघनामिमां न चिनुते माहेश्वरीं स्वां चितिम् ।
मध्ये बोधसुधाब्धि विश्वमभितस्तत्फेनपिण्डोपमम्
यः पश्येदुपदेशतस्तु कथितः साक्षात्स एकः शिवः ॥

येषां वृत्तः शाङ्करः शक्तिपातो
येऽनभ्यासात्तीक्ष्णयुक्तिष्वयोग्याः ।
शक्ता ज्ञातुं नेश्वरप्रत्यभिज्ञा-
मुक्तस्तेषामेव तत्त्वोपदेशः ॥

समाप्तमिदं प्रत्यभिज्ञाहृदयम्

कृतिस्तत्रभवन्महामाहेश्वराचार्यवर्यश्रीमदभिनवगुप्तपादपद्मोपजीविनः श्रीमतो राजानक
क्षेमराजाचार्यस्य

(பொ-ள்) சைதன்யத்தின் இந்த 'நான்' என்னும் உணர்வு மந்திரங்கள் அனைத்திற்கும் தோற்றுவாயாகவும் அடையுமிடமாகவும் இருப்பதால் அது மிகுந்த வீரியத்திற்கு நிலைக்களனாய் இருக்கிறது' மேலும் அது குறித்த பயனை விளைவிக்கும் காரியத்திற்கு ஏதுவாயிருக்கிறது.

இக்கருத்து ஸ்பந்தகாரிகையில் (2-வது நிஷ்யந்தம், 1, 2-வது காரிகை) இங்ஙனம் கூறப்பட்டுள்ளது.—

'எல்லா மந்திரங்களும் இதன் பலத்தைக் கொண்டு......இம் மந்திரங்கள் அனைத்தும் சிவத்தின் தன்மையைக் கொண்டுள்ளன'. சிவசூத்திரத்திலும் (1-வது உன்மேஷம், 22-வது சூத்திரம்.)

'இப்பெரும் தடாகத்தை (சைதன்யத்தை) ஆழ்ந்து சிந்திப்பதன் மூலம் மந்திரசக்தியை ஒருவன் பெறுகிறான்' என்று கூறப்பட்டுள்ளது.

மகாமந்திர வீரியத்தைக் கொண்ட பரிபூரணமான 'நான். என்னும் சைதன்யத்தில், உடல், பிராணன் முதலானவற்றை மூழ்கும் படிச்செய்து, ஆவேசித்து, அப்பரிபூர்ணத்தன்மையைப் பெறுவதிலே உறுதி பூண்டு, உடல் முதலான பொருள்களையும் நீலம் முதலான பண்புகளையும் சைதன்யரசத்தில் அமிழச்செய்வது அதன்மயமாய் ஆகும் வழி. இதனைச் சிறிது விளக்குவோம். எவ்வெப்போது நமக்கு இது உடல், இது சுகம், இது நீலம் முதலான உணர்வுகள் தோன்று கின்றனவோ அல்லது உறுதியாக நம்பப்படுகின்றனவோ அல்லது நினைவுகூரப்படுகின்றனவோ அல்லது ஊகிக்கப்படுகின்றனவோ அவ்வப்போது பின்னணியில் பிரகாசிப்பது சித்சக்தியின் விளையாட்டே. 'அப்பிரகாசம் இல்லையானால் எதுவுமே பிரகாசிக்காது' என்று சாத்திரம் கூறும். அப்பிரகாசம் சுயமாகவே அப்படிப் பிரகாசித்தாலும், அதன் மாயாசக்தியால் அதனதன் வெவ்வேறுபட்ட இயல்புகளை ஏற்றுக்கொண்டு அவ்வவ்வியல்பினைக் கொண்ட பொருளாய் உடலென்றும், நீலமென்றும், பிறவாகவும் தோற்ற மளிக்கிறது. அந்த நிலையில் மாயைக்குட்பட்ட மாந்தர்களால் அபிமானவசத்தால் ஞானமென்றும் சங்கல்பம் என்றும் அத்யவசாயம் என்றும் கருதப்படுகிறது. உண்மையில் பார்க்கப்போனால் சித்சக்தி ஒன்றே. இது பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

'வேறுபட்ட இயல்பினைக் கொண்ட பொருளாய் காணப்படுவது எந்த ஒரு சைதன்யமோ (பிரதிபையோ), அதுதான் வேறுபாடற்ற எல்லையற்ற சைதன்யரூபனை அறிவோனாகிய (பிரமாதா) மகேசுவரன்.'

இக்கருத்து (ஈசுவரபிரத்யபிஜ்ஞை ஞானாதிகாரம் 5-வது ஆந்நிகம், 18-வது காரிகை) பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

'ஈசுவரனின் மாயாசக்தியினாலே அச்சித்சக்தியே வேறுபட்ட அறியப்படுபொருள்களில் நின்று ஞானமென்றும், சங்கல்பமென்றும், அத்யவசாயமென்றும் பல பெயர்களில் அழைக்கப்படுகின்றது.'

ஆகவே எல்லா நிலைகளிலும் சித்சக்தி என்பது ஒன்றே. அச்சக்தி விரியும்போது அதனோடு பொருந்தி அதையே பற்றுக்கோடாகக் கொண்டு அதனை அடையவேண்டும். முன்னர் கூறப்பட்ட யோக முறையில் கரணங்களைத் திறப்பதும் மூடுவதுமாகிய கிரமத்தில் அதிலே ஆவேசித்தல் வேண்டும். (அனைத்திலும் சைதன்யம் பொருந்தியிருப்பதால்) ஒவ்வொன்றிலும் எல்லாமே இருப்பதாகக் கொள்ளப்படும். ஆகவே அவ்வவற்றின் ஒடுக்கம் முதலானவை நிகழ்கின்ற விடத்து எந்த மாயைக்கப்பாற்பட்டவையான அந்தக் கரண புறக்கரணத் தொகுதியை இயக்கும் சைதன்ய தேவதைக் கூட்டம் உளதோ அதை அதிட்டிக்கக்கூடிய பரபைரவத்தன்மையை பரமயோகியானவன் அடைகிறான்.

இக்கருத்து கீழ்க்கண்ட ஸ்பந்த காரிகையின் 3-வது நிஷ்யந் தத்தின் 19-வது காரிகையில் கூறப்பட்டுள்ளது.

'எப்போது அந்த ஒன்றில்' (பரிபூரண அகந்தையாகிற ஸ்பந்த தத்துவத்தில்) ஒருவன் ஆழ்ந்திருக்கின்றானோ அப்போது அவன் புரியட்டகம் அல்லது சூக்கும சரீரம் என்று சொல்லப்படுகிற 'ஒன்றின்' தோற்றம் ஒடுக்கம் ஆகியவற்றை வயப்படுத்தியவனாய் உண்மையான போக்தா ஆகிறான்; கரணதேவதைகளுக்கு ஈசுவரனுமாகிறான் ?

மேலே கொடுக்கப்பட்டுள்ள காரிகையில் 'ஒன்றில்' என்பதன் விளக்கம் (ஸ்பந்தகாரிகை, நிஷ்யந்தம்-3, காரிகை 12-இல்) தரப்படுகிறது.

'ஒவ்வொன்றையும் ஒரிடத்தில் இருக்கச்செய்...' இங்கே 'ஒரிடத்தில்' என்பது சித்சக்தியின் அசைவை (ஸ்பந்தத்தை)க் குறிக்கும் இதை உந்மேஷரூபமாகக் கொள்ளவேண்டும். 'ஒன்றின்' என்பது இதற்கு முந்திய காரிகையில் 'புரியட்டகத்தினுல் தடை செய்யப்பட்ட......' என்று கூறப்பட்டுள்ளதால் அதையே இங்கும் கொள்ளுதல் வேண்டும். விவரணகாரர் கல்லடர் கூறியது போல் 'சூக்கும உடலிலோ தூல உடலிலோ ஒரிடத்தில்' என்று பொருள் கொள்வது பொருந்தாது.

என்னுலியற்றப்பட்ட ஸ்துதியில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது— 'சுதந்திரனுகவும் (இந்திரியங்களை வென்றவனுகவும்) சைதன்ய சக்ரத்திற்கு சக்ரவர்த்தியாகவும், மகேசுவரனுகவும், இந்திரியங்களை அதிட்டித்து நிற்கும் தேவதைக் கூட்டத்தால் வழிபடப்படுவோனுகவும் எவனெருவன் இருக்கின்றுனே அவனே சித்தியடைந்தவனுவான்.'

இதுவரை இந்நூலில் கூறப்பட்டனைத்தும் சிவமே, அதாவது சிவப்பேற்றினை எய்துவித்தற்கு ஏதுவாகிறது; சிவனிடமிருந்து பெறப்பட்ட காரணத்தினுலும் சிவம் என்று கூறலாம். சிவசொரூபத்தினின்றும் வேறுபடாமையானும் சிவம் என்று கூறலாம். ஆகவே இந்நூல் 'சிவம்' என்ற சொல்லால் முடிக்கப்பெறுகிறது.

உடல், பிராணன், சுகம் முதலியவற்றுல் எஞ்ஞான்றும் மக்கள் கட்டுண்டிருக்கிறுர்கள் ; அந்த நிலையில் பூர்ணுனந்தச் செறிவாகிற மகேசுவரனுடைய தன்மை வாய்ந்த தமது சைதன்யத்தை அவர்கள் உணர்வதில்லை,

இந்நூலில் வழங்கப்பட்டுள்ள உபதேசத்தின் வாயிலாக இப் பிரபஞ்சபடலைத்தையும் எவனொருவன் ஆத்மஞானமாகிற அமுதக் கடலில் நாற்புறமும் பரவியிருக்கிற அவ்வமுத அலைகளின் பிண்ட மாகக் காண்கிருனே அவன் அந்த ஒப்பற்ற சாக்ஷாத் சிவனுகக் கருதப்படுவான்.

எவர்களுக்கு கிவனின் சக்திபாதம் ஏற்பட்டுள்ளதோ, எவர்கள் சாத்திரப்பயிற்சியின்மையால். யுக்திகளைக்கொண்டு நுணுகி ஆராயும் தகுதி பெற்றிலரோ, அதன் காரணமாக ஈசுவரபிரத்ய பிஜ்ஞையை அறிவதற்கு இயலாதவராய் இருக்கின்றனரோ, அவர்களின் பொருட்டு இத்தத்துவோபதேசம் வழங்கப்பட்டுள்ளது.

பிரத்யபிஜ்ஞாஹ்ருதயம் முற்றிற்று.

மாண்புகு மகாமாகேசுவரரும் ஆசாரியசிரேட்டருமான ஸ்ரீமத் அபிநவகுப்தரின் அடியொற்றி வாழ்கின்ற ஸ்ரீமத் ராஜானக க்ஷேமராஜரின் ஆக்கம் இந்நூல்.

சுபம்

## பிற்சேர்க்கை—(i)

# அரும்பத உரை

**அகுலம்:** ‘குலம்’ என்பது சக்தியைக் குறிக்கும். சக்தியோடு கூடியதாக இன்றி சிவத்தைக் குறிப்பது ‘அகுலம்’.

**அக்யாதி:** அஞ்ஞானம், அறியாமை.

**அநுக்ரஹம்:** தெய்வ அருள்:

**அநுத்தரம்:** (ந + உத்தரம்) தனக்கும் மேலான ஒருவன் இல்லாத பரமசிவன்.

**அபரிஞானம்:** அறியாமை.

**அணு:** குறைந்த சக்தியை உடைய சீவான்மா.

**அஹந்தா:** ‘அஹம்’ எனும் பரமசைதன்யம்.

**ஆத்மா;** (அந் = உயிர்ப்பு; அத் = சஞ்சரித்தல்) என்பவற்றைக் கொண்டிருக்கும் சீவன்.

**ஆபாசம்:** மூலத்தையொத்த நிழல்; சித்திரம் போன்ற பிரபஞ்சம்.

**ஆவேசம்:** மற்றொரு பொருளின் தன்மையை ஏற்றல்.

**உபாயம்:** முக்திக்கு உபாயமாகக் கருதப்படும் ஆணவோபாயம், சாக்தோபாயம், சாம்பவோபாயம், அநுபாயம் என்பன.

**உபாதி:** சார்புப்பொருள்.

**உன்மீலனம்:** கண் திறத்தல்; பிரபஞ்சோத்பத்தியைக் குறிப்பது. இது உன்மேஷமென்றும் கூறப்படும்.

**உன்மேஷம்:** கண் திறத்தல்; பிரபஞ்சோத்பத்தியைக் குறிப்பது. யோகநெறியில் சைதன்ய மலர்ச்சிக்கு அதிட்டானம்.

**கலா:** (கலை) குறுகிய கர்த்ருத்வத்தின் தோற்றநிலை.

**கிரமம்:** படைத்தல், நிலைபெறுத்தல், ஒடுக்குதல் என்ற சைதன்ய சக்கரம்,

**குலம் :** சக்தி.

**குலாம்நாயம் :** சாக்த சாஸ்திரம்.

**கேசரீ :** வாமேசுவரீ சக்தியின் ஒரு நிலை. ஆகாசரூபமாக சைதன்யம் பிரதிபலித்தல். (கம் = ஆகாசம், சரீ = தொழிற் படுதல்).

**கோசரீ :** வாமேசுவரீ சக்தியின் மற்றொரு நிலை. அந்தக்கரணத் தில் நின்று தொழிற்படுதல் (கோ = இந்திரியம், இந்திரியத்தின் ஆசிரயமான அந்தக்கரணம்).

**கிராஹகன் :** அறிவோன், பிரமாதா.

**கிராஹ்யம் :** அறியப்படுபொருள், பிரமேயம்.

**சகலர் :** ஆணவம், மாயீயம், கார்மம் என்னும் மும்மலங்களை உடைய சீவன்.

**சக்தி :** சிவனிடமிருந்து பிரிக்கமுடியாத ஸ்வாதந்திரியம்.

**சக்தி சங்கோசம் :** பொறிகளின் வழியே வெளியே செல்லும் சித்தம் உள்முகமாகத் திரும்புதல். (சங்கோசம் = சுருங்குதல்)

**சக்தி விகாசம் :** பொறிகள் புறத்தே போயினும் உள்ளார்ந்த சத்தியப் பொருளில் ஒருமுகப்பட்டிருத்தல். 'இது சக்தி பிரசரம்' எனவும் சொல்லப்படும்.

**சக்தி விசிராந்தி :** சமாதியில் ஆழ்ந்திருத்தல்.

**சக்திபாதம் :** இறையருள் வீழ்ச்சி.

**சம்சாரி :** (சம் + ஸ்ரு) புதுப்புது உடலில் சென்று கொண்டே யிருக்கும் சீவன்.

**சமாபத்தி :** சமாதியின் பரிபூர்ண நிலை.

**சமாவேசம் :** சீவ சைதன்யம் சிவ சைதன்யத்தில் லயித்தல்.

**சம்வித் :** முற்றறிவுடைய சைதன்யம். (வித் = அறிதல்).

**சிதி :** சைதன்ய சக்தியைக் குறிக்கும் பெண்பாற் சொல்.

**சித்:** சுத்த சைதன்யனை பரமசிவன். 'சித்கனன்' என்றும் கூறப்படுபவன்.

**சித்தம்:** சைதன்ய சக்தி குறுக்கம் பெற்ற நிலையில் சத்துவகுணம் பொருந்திய சீவாத்மா. 'சங்கோசினீ' (குறுகிய சித்) எனவும் படும்.

**சுவாதந்திரியம்:** பரமசிவன் தன்னிச்சையாகத் தொழிற்படுதற் குரிய சக்தி.

**தந்த்ரம்:** ஆகமம்.

**தரிசனம்:** உள்ளுணர்விலும், யுக்தியாலும், சாத்திரத்திலும் காண்டல். தத்துவ நெறி.

**திக்சரீ:** புறக்கரணங்களோடு தொடர்புகொண்டு பல திசைகளிலும் செல்லும் வாமேசுவரியின் மற்றொரு நிலை.

**துரீயம்:** சாக்ரத், சொப்பனம், சுழுப்தி ஆகிய மூன்று நிலைகளிலும் ஊடுருவி நிற்கும் நான்காவது நிலை. இது சாக்ஷி சைதன்யம் என்றும் கூறப்படுவது.

**த்ரிகம்:** பதி, பசு, பாசம் முதலானவற்றின் முக்கூட்டு.

**நிபாலனம்:** மானசிகக் காட்சி.

**நிமேஷம்:** கண்ணை மூடுதல்; பிரபஞ்சம் சிவனிடத்து ஒடுங்குதல்.

**பட்டாரிகை:** சிவபட்டாரிகை எனப்படும் சிவசக்தி, 'பர்த்தா' (தலைவன்) என்பதன் பெண்பாற் சொல்.

**பலம்:** சைதன்யம் எழுச்சியுற்று பிரபஞ்சமாதல்.

**பிந்து:** நுண்ணிய திண்ணிய உருக்கொண்ட அறிவுச் சக்தி. வித்='அறிதல்' என்பதனடியாகப் பிறந்த சொல். பிரபஞ்ச விரிவுக்கு முதல் நிலை. அக்கரப் பிரபஞ்சத்திற்குத் தோற்றுவாயாகவும் கொள்ளப்படும்.

**பிரகாசம்:** சைதன்யம் பிரபஞ்சமாக வெளியீட்டினைப் (manifestation) பெறுதல்.

**பிரகிருதி:** 'புத்தி' முதல் 'பூமி' ஈருன தத்துவங்களின் தோற்றுவாய்.

**பிரத்யபிஜ்ஞை:** பழம் பொருளை உணர்ந்து நினைவுகூர்தல் (Recollection).

**பிரமாதா:** அறிவோன், சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர், மந்திரர், மந்திரேசுவரர், மந்திரமகேசுவரர், சிவன என்று எழுவகை அறிவோர்கள்.

**பிரமேயம்:** அறியப்படு பொருள்.

**பிரளயாகலர்:** உலகம் ஒடுங்கிய நிலையில் ஆணவம், கருமம் என்னும் இருமலத்தை உடையோர்.

**புரியட்டகம்:** பஞ்சதன்மாத்திரைகளான சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் (ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்) என்பவற்றுடன் புத்தி, அகங்காரம், மனம் ஆகியவையும் சேர்ந்த எட்டு தத்துவங்களாலான சூக்கும சரீரம் (புரி + அஷ்டகம்).

**பூசரீ:** வாமேசுவரியின் உலகப்பொருள்களில் பொருந்திய நிலை.

**பூமிகை:** இறைவன் உலக அரங்கில் நடிக்க மேற்கொண்டுள்ள பாத்திரம்.

**பைந்தவீ கலை:** பேரறிவாளன் (பரபிரமாதா) ஆன் சிவனின் 'சுவாதந்திரியம்' அல்லது என்றும் எஞ்ஞான்றும் அறியும் நிலை.

**பைரவர்:** 'ப' பரணத்தை(காத்தலை)யும், 'ர' ரவணத்தை(சம்கா ரத்தை)யும், 'வ' வமனத்தை(சிருட்டியை)யும் செய்பவர்.

**பைரவமுத்திரை:** பேத அறிவை அகற்றி அபேத அறிவைத் தோற்றுவித்துச் சிதானந்தத்தை நுகர்தல் (முத் = ஆனந்தம், ரா = தருதல்). யோகநெறியில் கண்கள் விழித்த நிலையிலேயே இருந்தும் மனம் உள்முகமாயிருத்தல்.

**மத்யம்:** சைதன்யம், சுத்த அஹந்தை, மத்யநாடி, பிரம்மநாடி.

**ராகம்:** சிவனின் பூர்ணத்வம் குறுகி சிறுசிறு பொருள்களில் வைக்கப்படும் பற்று.

**வன்னி:** கீழ்க்குண்டலினியின் மூலப்பகுதி, அதன் இடைப்பகுதியின் கீழ் பாதியில் யோக நெறிப்படி பிரவேசித்தல். (வஹ் = எடுத்துச் செல்லுதல்).

**வாமேசுவரீ:** (வாமம் = மாற்றுமுறை) பராசக்தி, அபேத நிலையை விடுத்து பேதநிலையைத் தோற்றுவிக்கும் சக்தி.

**வாஹம்:** பிராண வாயுவும் அபான வாயுவும் செல்லும் நாடிகள்.

**விகல்பம்:** பேத அறிவு.

**விஞ்ஞானகலர்:** மெய்யறிவு பெற்றமையால் ஆணவமலம் ஒன்றையே கொண்டவர்.

**வித்தை:** எல்லைக்குட்பட்ட சிற்றறிவு.

**விமர்சம்:** பரமசிவனின் கிரியாசக்தியோடு கூடிய ஞானம். இதனால் சிருட்டி நிகழ்கிறது.

**வியுத்தானம்:** சமாதி நிலையினின்று விழிப்பு நிலைக்கு மீளுதல்.

**விலயம்:** மறைப்பு.

**விஷம்:** கீழ்க்குண்டலினியின் இடைப்பகுதியின் மேல்பாதியையும் மேற்பகுதி முழுமையையும் யோகநெறிப்படி பிரவேசித்தல்.

**ஸ்பந்தம்:** சக்தியின் அசைவு அல்லது செயற்பாடு.

**ஸ்புரத்தை:** பிரகாசித்தல்.

பிற்சேர்க்கை—(ii)

# மேற்கோள் நூல்களும் ஆசிரியர்களும்

# பிழை திருத்தம்

| பக் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 21 | 7 | -पधाभि: | -पाधिभि: |
| 23 | 27 | इषि | इति |
| 28 | 11 | सृष्टता | स्रष्टता |
| 48 | 10 | विद्य ङ्कुरो | विद्याङ्कुरो |
| 59 | 23 | -பொளாய் | பொருளாய் |
| 61 | 2 | तद्त्तर्थं- | तत्तदर्थं- |
| 62 | 19 | -मेव | -मेष |
| 63 | 6 | 1, 2 | 10, 11 |
| 64 | 10 | உடலிலோர் | உடலிலோ |
| 66 | 6 | கிவனின் | சிவனின் |

## ஆசிரியரைப்பற்றி

சிதம்பரம் தாலுக்கா குணமங்கலம் கிராமத்தில் திரு. பெரிய பெருமாள் பிள்ளைக்கு 22—12—1914இல் மகனாகப் பிறந்தார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் 1930 முதல் 1936 வரை பயின்றார். 1934இல் B.A. பட்டமும் 1936இல் M.A. (சம்ஸ்கிருதம்) பட்டமும் பெற்று அங்கேயே மகாமகோபாத்யாயர் S. குப்புசாமி சாஸ்திரியாரிடம் 1936-38ல் ஆராய்ச்சி மாணவனாக இருந்தார். 1939இல் L.T. பட்டம் பெற்றார். சென்னை மாநிலக்கல்லூரியில் பத்தாண்டுகள் (1939-49) துணைப்பேராசிரியராகவும் பத்தாண்டுகள் (1957-66 & 69-71) சம்ஸ்கிருத முதுகலைப்பட்டப்படிப்புத்துறைத் தலைவராகவும் பணியாற்றியபோது ஒப்பிலக்கணம், வேதாந்தம், சாகித்யம் முதலானவற்றை எம். ஏ. மாணவர்களுக்குப் போதித்து வந்தார். 1962-63இல் சென்னை அரசினர் கீழ்த்திசை ஏட்டுச்சுவடி நிலையக் காப்பாளர் பொறுப்பையும் ஏற்றிருந்தார். 1949-54இல் திருவையாறு சம்ஸ்கிருதம் தமிழ் அரசர் கல்லூரி முதல்வராகவும், 1954-56இல் கீழ்த்திசை மொழிப்பள்ளிகள் கல்லூரிகள் ஆகியவற்றின் மாநிலக் கண்காணிப்பாளராகவும், 1966-69இல் கல்லூரிக் கல்வித் துணை இயக்குநராகவும் பணிபுரிந்துள்ளார். 1971இல் ஓய்வு பெற்றபின் சென்னைப் பல்கலைக் கழகப் பதிவாளராக 1971-74ஆண்டுகளில் பணிபுரிந்து பின்னர் 1975 செப்டம்பர் முதல் சென்னை தமிழ், சம்ஸ்கிருதம் பிற இந்திய மொழியாராய்ச்சி நிறுவனத்தில் சம்ஸ்கிருதப்பிரிவின் இயக்குநராகப் பணி புரிந்து வருகிறார்.

கோலாலம்பூரில் 1975இல் நடைபெற்ற உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டிலும், மொழி, சம்ஸ்கிருதம் பற்றிய பிற அகில இந்திய மாநாடுகளிலும் பங்கேற்றிருக்கிறார்.

### இவருடைய நூல்களில் குறிப்பிடத்தக்கவை

1. வடமொழி இலக்கியச்சோலை (சில வானொலிப் பேச்சுகளின் தொகுப்பு, 1966).

2. மாதவாசாரியாரின் 'சைவ தரிசனம்' —ஆங்கில மொழியாக்கம் (சென்னைப் பல்கலைக் கழகம், 1973).

3. உமாபதி சிவாசாரியாரின் 'சதரத்ன சங்கிரகம்'-ஆங்கில மொழியாக்கம் (சென்னைப் பல்கலைக் கழகம், 1973).

4. இந்திய எழிற்கலை (சென்னைப் பல்கலைக் கழகம், 1977).

## இவர் நடத்திய அரக்கட்டளைச் சொற்பொழிவுகளில் குறிப்பிடத்தக்கவை

1. காசி, அலகாபாத் சர்வகலாசாலைகளில் 'சைவசித்தாந்தம்' பற்றி ஸ்ரீ அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள் சிவஞான சித்தியார் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் (1973).

2. சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'பக்திக்கோட்பாடு' பற்றிப் பேராசிரியர் L. வெங்கடரத்னம் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் (1967).

3. அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் 'பகவத்கீதை' பற்றி துர்க்கமணி சுந்தரேச கீதை அறக்கட்டளைச் சொற் பொழிவுகள் (1976).

1972இல் தருமையாதீன மகாசந்நிதானம் அவர்களால் 'மும்மொழிக் கொண்டல்' என்னும் பட்டம் வழங்கப்பட்டது. 1975இல் இவர் ஆற்றிய சம்ஸ்கிருத சேவை குறித்து காஞ்சி காமகோடி பீடாதிபதி அவர்கள் ஆசியுடன் ஆடை அணிவிக்கப் பட்டது.

## OTHER GOLDEN JUBILEE PUBLICATIONS

**In English**

Being and Unity in Western Philosophy
*by Herbert Herring*

Dvaita Vedānta
*by S. S. Raghavachar*

Viśiṣṭādvaita
*by S. S. Raghavachar*

Religion, Language and Philosophy
*by N. H. Palmer*

Indian Aesthetics
*by T. P. Meenakshisundaran*

Christianity and Tamil Culture
*by Ignatius Hirudayam*

Christian Poets and Tamil Culture
*by T. Dayanandan Francis*

Perspectives in Śaivism
*by V. Ramakrishnan*

Reflections on Vedānta
*by Herbert Herring*

Lectures on Some Aspects of Indian Social Philosophy
*by T. P. Meenakshisundaran*

**In Tamil**

க. வச்சிரவேல் முதலியார்
சிவஞானபாடியத்திறவு

வை. இரத்தினசபாபதி
வீரசைவம்

பெ. திருஞானசம்பந்தன்
இந்திய எழிற்கலை

சோ. ந. கந்தசாமி
பௌத்தம்

பெ. திருஞானசம்பந்தன்
காச்மீர சைவம்

தி. தயானந்தன் பிரான்சிஸ்
கிறிஸ்தவக் கவிஞர்களும் தமிழ்ப்பண்பாடும்

தா. ஏ. ஞானமூர்த்தி
சமணம்

**In English and Tamil**

Islam, Indian Religions and Tamil Culture
*by M. M. Ismail and S. M. Sulaiman*

